# மக்களை எட்டிய மறைத்தமிழ்



மீனாட்சி நூலகம்



டாக்டர் சுப. அண்ணாமலை

முதற்பதிப்பு : 22-8-1988
உரிமை : மீனாட்சி நூலகம்

விலை ரூபாய் : 10. 00

கிடைக்குமிடம் :

ஐந்திணைப் பதிப்பகம்
சென்னை-600 005

பாரி நிலையம்
சென்னை-600 001

மீனாட்சி பதிப்பகம்
மதுரை

அச்சிட்டோர்:
கலைவாணி கலர் அச்சகம்
சென்னை-14. போன் : 849789



திரு யெ. மு. சொ. முத்தப்பன்

தோற்றம் : 17-2-58 மறைவு : 22-8-84

# அணிந்துரை

**டாக்டர் வெ. தெ. மாணிக்கம்** எம். ஏ. பி. எச். டி.,

(பேராசிரியர், தமிழ்த் துறைத் தலைவர்,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30)

தமிழ் நாட்டின் வரலாறு மிகநீண்டது. தெளிவான வரலாற்றுக் காலகட்டங்கள் தமிழ் மொழிவரலாற்றில் நிரம்ப உள்ளன சங்க கால முதல் விடுதலைக்குப் பின்னுள்ள காலம் வரை தமிழக வரலாற்றில் தெளிவாக உள்ளன. அடுத்து ஓரிரண்டு நூற்றாண்டுகால வரலாற்றுத் தெளி வில்லாத நிலைக்குப்பின், பல்லவர்காலம் நம்நாட்டு வரலாற்றில் தெளிவாகப் புலனாகிறது.

பல்லவ மன்னர்கள் பிராகிருதப்பல்லவர், சமசுகிருதப் பல்லவர், தமிழ்ப்பல்லவர் என மூவகையினர். தமிழ்ப் பல்லவர், முற்குறித்த இருவகைப்பல்லவரின் வேறுபட்ட வரல்லர் அவர்கள் வழித்தோன்றிய பரம்பரையினரே ஆவர், தமிழ் நாட்டில் தமிழியம் தழைக்க வேண்டிய சூழ்நிலையும், தமிழகமக்களைத்தமிழ் வழியே ஆட்சிசெய்தல்தான் இயலும் என்ற கட்டாயமும் பல்லவவழிமுறையினரை முழுமையான தமிழ் அரசர்களாக மாற்றின. இந்த நிலையிற்றான், தமிழர் தம் சமய உணர்வும், கடவுட் கொள்கையும் முக்கிய இடம் பெறுகின்றன. இந்தக்காலத்தில், சைவசமய மறுமலர்ச் சிக்குத்தம்மை அர்ப்பணித்துக்கொண்டவர்களே தேவார முதலிகள் ஆவர். தமிழையும் இறைவனையும் நேராகப் பாவித்துக்கூறுவதும், தமிழ்மொழியால் சிவபெருமானைப் பாடவேண்டும் என்று இயம்புவதுமாகிய கூறுபாடுகளைத் தேவாரப்பதிகங்களிற் காண்கிறோம். தேவாரமூவரில் திருஞானசம்பந்தர் பக்தி இயக்கத்துடன் தமிழ் இயக்கத்தை யும் வளர்த்தார்; வெற்றி கண்டார்.

'இயக்கம்' என்ற சொல்லுக்குத் தூண்டுவது, புதுப் பிப்பது, உயிரூட்டம் பெறச்செய்வது என்று பல பொருள் கள் உள. சங்ககாலத்தை அடுத்த இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளில் தமிழ்ச் சமுதாயத்தில் பல்வேறு மாற் றங்கள் நிகழ்ந்து போயின. ஒன்று வேற்றவர் ஆட்சி. இதனால் தமிழ்ப்பண்பாடு தன்நிலை இழியத்தொடங் கியது.

வேறு ஆட்சி என்பது, ஆட்சிமாற்றத்தோடு கலாச் சாரப் படையெடுப்புமாகும். ஆள்வோர் போற்றுதலுக்கு இலக்காகாத எதுவும் தன்நிலையில் சரியத்தொடங்கும். காலங்காலமாக, தமிழர் போற்றி வந்த தமிழ்ப்பண்பாடும் சற்றே தன்நிலை இழியத்தொடங்கி மாற்றங்கள் பெற்றது. ஆயினும் தமிழர் தம் மனத்தில் வேரூன்றிக் கிடந்த அடிப் படைப் பண்பாட்டு உணர்வுகள், இவ்வகை மாற்றத்துக்கு முழுமையும் ஆட்படாமல் தன்நிலை காக்கும் உணர்வுடன் எதிர்செயல்பட்டே வந்தன. இத்தகைய தமிழர்தம் மன உணர்வே மூன்றாவது பல்லவ மரபினரை முழுக்க முழுக்கத் தமிழ்ப்பல்லவராக மாறச் செய்தது என்பது தேற்றம்.

பண்பாட்டின் கூறுகளாக அமைவன மொழியும், அம் மொழி சார்ந்த பிற இயல்புகளுமாம். தமிழும், தமிழால் வளர்க்கப்பட்ட இயல், இசை, நாடகமும், தமிழால் ஏற்கப் பட்ட கடவுட் கொள்கை, வழிபாடு முதலியனவும் தமிழ்ப் பண்பாடுகளாம். பழைய காலத்திலிருந்தே போற்றி வந்த சைவ சமய உணர்வு இக்காலத்தே மீண்டும் புத்துயிர் பெற்றுச் சமயத்துறையில் 'எங்கும் தமிழ் எதிலும்தமிழ்' என்ற நிலைபெறக் காரணமாயினர் தேவார மூவர். இவருள்ளும் திருஞானசம்பந்தர் சிறப்பிடம் பெறுகிறார். ஏனைய இரு வரும் பக்தி இயக்கத்தில் தமிழ்ப்பற்றை வளர்த்தனர். திருஞானசம்பந்தரோ தமிழ் இயக்கத்தால் பக்தி உணர்வை யும் ஓர் இயக்கமாக வளர்த்தார். நூலாசிரியர் இக் கருத் தையே 'தமிழ் இயக்கம்' என்னும் தலைப்பில் கோடிட்டுக்

காட்டியும், வேண்டுவழி விரித்தும், நிறுவியும் சென்றுள் ளார்.

இதே நூற்றாண்டில் காலடியில் தோன்றிய ஆதி சங்கரர் இந்தியாமுழுமையும் கால்நடைப் பயணம் செய்து, சமயப் பணியாற்றி, வீழும் நிலையிலிருந்த 'இந்துசமயத்தை' மறு மலர்ச்சியுறச்செய்தார். தமிழ் நாட்டிலோ, திருஞான சப்பந்தர் ஒவ்வோர் ஊருக்கும் நடந்து சென்று, பதிகம்பாடி, 'சைவசமயத்தைத் தமிழியக்கமாகவே மக்களிடையே பரப்பினார். தன் சமயநோக்கையே சைவசமய அளவில் தமிழ்நாட்டில் தமிழ்மொழிவழியே தமிழர்மனங்கொள்ளுமாறு ஆளுடையபிள்ளை நிறைவேற்ற ஆற்றிய அரும்பணிகளை அறிந்தே ஆதிசங்கரர் தமிழ்நாட்டில் நுழையாமலேயே இந்தியாவின் இதரபகுதிகளுக்குச் செல்வாராயினர். தமிழ் மொழி வழியே சைவசமய வளர்ச்சியை—ஈரியக்கமும் இணை யாகப் பின்னி வளர்ந்த பெருநிலையை -மனத்துள் எண்ணி மகிழ்ந்த அப்பெரியவர் தமிழாற்றலைக் கருத்திற் கொண்டு' திருஞானசம்பந்தரைத் 'திராவிடசிசு' என்றே குறிப்பிட்டுள் ளார்.

திருஞானசம்பந்தர் ஓர் அருளியற் கவிஞர் என்பதையும், கருவில் திருவுடையார் என்பதையும் தக்க அகச்சான்று களுடன் ஆசிரியர் நன்கு எடுத்துக்காட்டியுள்ளார், வினைப் பயன், உலகப்படைப்பு ஆகியவற்றை விளக்கும்பொழுது சைவசமயக் கருத்துக்களையும், சமணசமயக் கருத்துக் களையும் உறழக்காட்டித் தெளிவுறுத்தியுள்ள ஆசிரியர்திறன் போற்றத்தக்கது. (பக்கம். **14,15,69**)

தமிழின் முக்கூறுகளாகிய இயல், இசை, நாடகம் ஆகிய வற்றின் இன்றியமையாமையைக் கடவுள் வழிபாட்டிலும் மரபு வழி மறுமலர்ச்சி பெறச் செய்த மாட்சி நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர்க்கே உரியது இக்கருத்தை அழகுற எடுத்துக் காட்டிய ஆசிரியரின் புலமை போற்றத்தக்கது. (பக்கம் **11, 61**) இவ்வாறாக, திருஞான

சம்பந்தர் சமயத் தொண்டும், கலைத் தொண்டும், மொழித் தொண்டும், சமுதாயத் தொண்டும் ஆகிய அனைத்தையும் ஒரு சேரச் செய்த பெருமைக்குரிய நிலையை ஆசிரியர் நூல் முழுதும் பலவாறு காட்டியுள்ள அருமை படித்து இன்புறத் தக்கது.

டாக்டர் **சுப. அண்ணாமலை** அவர்கள் ஆழ்புலமை மிக்க இன்னோரன்ன நூல்களைத் தொடர்ந்து எழுதி, தமிழ் மொழி, மரபு, சமயம், கலை, பண்பாடு ஆகியவற்றைக் காக்கும் அரும்பணியைப் புரிய வேண்டும் என்பது என் வேணவா.

வான்முகில் வழாஅது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்.

சென்னை
*20-08-1988*

**வெ. தெ. மாணிக்கம்**

# முன்னுரை

சிவநெறி அண்ணல், புதுவயல், **திரு. யெ. மு. சொக்கலிங்கம்** அவர்கள், தம் அரும் பெறற்செல்வன் **யெ.மு. சொ. முத்தப்பனின்** திருத்தரு நினைவாக நிறுவியுள்ள அறக்கட்டளை சைவமும், தமிழும் தழைத்தினிது வளர நற்பணி ஆற்றிவருகின்றது. அக்கட்டளையின் சார்பில்' இரண்டாவதாண்டுச் சொற்பொழிவுகளைத் **திருஞான சம்பந்தர்** பற்றி நிகழ்த்துமாறு திரு. சொக்கலிங்கம் அவர்கள் என்னை வேண்டினார்கள்.

'கரும்பு அயிறற்குக் கூலி கிடைக்கின்றதே' என மகிழ்ந்து, *22-8-87, 23-8-87* ஆம் நாட்களில். சென்னை யில், தேவநேயப்பாவாணர் நூலக அரங்கில், "திருஞான சம்பந்தர் தந்த தமிழ்", "திருஞானசம்பந்தர் தேவாரத்தில் சைவநெறி" என்னும் தலைப்புகளில் உரைநிகழ்த்தினேன். இலக்கியத் தமிழாக இருந்த தமிழ், திருஞானசம்பந்தரால், இயக்கத்தமிழாக, மக்களுக்குச் செய்தியை நேரே கொண்டு சென்றதையும், மக்கள் தமிழ் ஆவதற்காக, அது மேற் கொண்ட எளிய நடையையும் புதுமைகளையும் முதற் பொழிவிற் காட்டினேன்.

திருஞானசம்பந்தர் இலக்கியப் படைப்பாளர் மட்டும் அல்லர்; அருளியற் கவிஞரும் ஆவார். அவர் சைவ இயக்கம் நடத்தவில்லை; **தமிழியக்கம்** நடத்தினார். தமிழ் மரபை, தமிழர் பண்பாட்டை, தமிழ்க் கலைகளை மறுமலர்ச்சி பெறச் செய்தார் என்பதை அடுத்த பொழிவில் உரைத் தேன்.

இவ்விரு பொழிவுகளையும் **"மக்களை எட்டிய மறைத் தமிழ்"** எனப் பெயரிய நூலாகச் சிவநெறியண்ணல் **யெ. மு. சொக்கலிங்கம்** அவர்கள் இப்பொழுது வெளியிடுகின்றார் கள். நான் சொற்பொழிந்த நாட்களில் என்னை இன்சொல் கூறித் தமது வளமனையில் விருந்தாகப் பேணிய அவர்க்கும், அவர் துணைவியார் திருமதி. சரோஜா சொக்கலிங்கம் அவர்கட்கும், அவர்கள் இளைய மகனுக்கும் என் அன்பும் நன்றியும் உரியன.

எனக்கு மிகவும் விருப்பமான திருமுறையை மீண்டும் ஊன்றிப் படிக்கச் செய்து, பேச வைத்து, நூலாக்கமும் செய்வித்த திரு. சொக்கலிங்கம் அவர்களின் **தமிழ் நெஞ்சம்** மறக்கற்பாலதோ?

இந்நூலை மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையில் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில், சபைத்தலைவர், முன்னால் துணை வேந்தர், மூதறிஞர் முனைவர், **வ. சுப. மாணிக்கனார்** அவர்கள் வெளியிடுகின்றார்கள் என்று அறிந்து உவகை கூர்கின்றேன். திறனறி புலவரால் வெளியிடப் பெறுதலின், இந்நூல் திறணறிந்து போற்றப்பெறும் என்பது உறுதி.

பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர், முனைவர் **வெ. தெ. மாணிக்கம்** அவர்களின் கணிப்புடை அணிந்துரையால் இந்நூல் அணிபெறுகின்றது. சங்க இலக்கியத்தை அடுத்து வந்த மக்கள் இலக்கியம் பற்றிய திறனாய்வு நூலுக்குச் சங்க இலக்கியப் புலவராகிய அவரது அணிந்துரை பொருத்தமானதேயாகும் அவர்க்கு என் நன்றி உரியது.

அறக்கட்டளையின் பணிகளை இயக்குபவர் நண்பர், முனைவர் **பழ. முத்தப்பன்** அவர்கள், என் இனிய நண்பர். சைவ சித்தாந்த ஆய்வுப் புலமையர். நான் சொற்பொழிந்த போது விரிவுரையாளராக இருந்து, இந்நூல் வெளிவருங் காலை, கல்லூரி முதல்வராக உயர்வு பெற்றவர். அவரது பெருமுயற்சியாலேயே இந்நூல் வெளிவருகின்றது. அவர்க்கு என் நன்றி உரியது.

இத்துணைப் பணிக்கும் காரணம், அமரர் யெ.மு. சொ. முத்தப்பன். கூர்த்த மதியும், செயற்திறனும் வாய்ந்த அவ் விளவலின் அருமை நினைவு பெருமையோடு விளங்குக. அவர்தம் குடும்பத்தார் புகழ்பெற்று உயர்க.

மதுரை

*4—8—1988* **சுப. அண்ணாமலை**

# நன்றியுரை

**மெ. மு. சொக்கலிங்கம்**

புதுவயல், பசும்பொன்மாவட்டம்

சைவமும், தமிழும் தழைத்தினிதோங்க நாளும் தொண்டாற்றும் பண்புடைய நாடு செட்டி நாடு. செட்டி நாட்டின் தன்னிகரற்ற மரபினராம் நகரத்தார்கள் நாளும் போற்றிப் புகழ்வது பன்னிரு திருமுறைகளாகும். திருமுறை களைப் போற்றிடச் சிறிதாவது தொண்டுசெய்ய வேண்டும் என்ற எண்ணத்தின் விளைவுதான் என் மகன் முத்தப்பன் நினைவாக ஏற்படுத்தப்பெற்ற அறக்கட்டளைச் சொற் பொழிவு. அதில் 1987 ஆகஸ்டு 22, 23 இரு நாள்களில் சென்னையில் நடைபெற்ற **திரு. டாக்டர் சுப. அண்ணாமலை** அவர்களின் சொற்பொழிவே இந்நூல் நாளும் இன்னிசை யால் தமிழ் பரப்பிய திருஞானசம்பந்தரின் அருள் வாக்கை நூலாக்கித் தந்த அன்னாருக்கு எம் நன்றி என்றும் உரித் தாகும். நூலை வெளியிடும் டாக்டர் **வ. சுப. மாணிக்கம்** அவர்களுக்கும் என்றும் நன்றியுடையவன் ஆவேன்.

இவ்வாண்டு அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்தும் டாக்டர் **வெ. தெ. மாணிக்கம்** அவர்களுக்கும் சொற்பொழிவு நடைபெற நிகழிடம் அமைத்துத்தந்த மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையாருக்கும் - அறக்கட் டளைச்சொற்பொழிவுக்குஉருக்கொடுத்து - ஆண்டு தோறும் நடைபெற- பல்லாற்றானும் உதவி புரிந்து வரும் என் உடன் பிறவாத் தம்பி டாக்டர் **பழ. முத்தப்பனுக்கும்** நூலை வெளியிடும் பொறுப்பை ஏற்ற மீனாட்சி நூலகத்தார்க்கும் அச்சிட்ட கலைவாணி கலர் அச்சகத்தாருக்கும். நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

# உள்ளுறை

# 1

## தமிழ் இயக்கம்

தமிழ் மரபை அறியாதோர்க்கு அதனை அறிவித்தல் தமிழ்த் தொண்டு. அத்தொண்டினைச் சங்க காலத்தில் கபிலர் ஆற்றியுள்ளார். ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் 'குறிஞ்சிப்பாட்டை'ப் பாடியமையே அத்தொண்டாகும்.

ஆனால், தமிழ் இயக்கம் என்பது வேறு தமிழ் மரபை அழிக்கும் வேற்று மரபு தமிழகத்துள் புகுந்து, வேர் பாய்ச்சி வளர்ந்தபொழுது அதனை நீக்கி, மீண்டும் தமிழ் மரபை நாட்டுதற்காக, கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் நாடு தழுவிய முறையில், தொடர்களைத் திரட்டித் தமிழியக்கம் நடத்தினார் திருஞானசம்பந்தர்.

அவருக்கு முன்பே சைவ இலக்கியங்களைக் காரைக் காலம்மையாரும், ஐயடிகள் காடவர் கோனும் படைத்தன ராயினும், அவர்கள் சமய இயக்கமோ, தமிழ் இயக்கமோ நடத்தவில்லை. தனியடியார்களாகவே வாழ்ந்து சமயத் தொண்டாற்றினார். ஆனால் திருஞானசம்பந்தர் திருத் தொண்டர் கூட்டத்தைச் சேர்த்து, அவர்களுடன் தமிழகம் முழுவதும் நடந்து ஊர்தோறும் மக்களைச் சந்தித்தார். அவர்களது வாழ்க்கையைக் கண்டறிந்தார். வேற்றுச் சமயங் களான சமண (ஜைன) பௌத்தங்களின் செல்வாக்கினால் அவர்கள் கைநெகிழவிட்ட சைவநெறியின் இன்றியமையாமை

சிறப்பு, பெருமை ஆகியவற்றை அவர்கள் உள்ளம் கொள்ள எடுத்துரைத்தார். சைவநெறியின் பழமையையும், அது தமிழ் நெறியாகவே - தமிழர் வாழ்வோடு பொருந்திய நெறியாகவே-பண்டு முதல் வளர்ந்துவரும் பான்மையையும், வேதநெறி, ஆகமம் ஆகியவற்றுடன் சைவம் கொண்ட தொடர்பையும். சைவசமய வாழ்க்கை முறையையும் வழிபாட்டு முறைகளையும் எடுத்துக் கூறினார்.

அவற்றையே பதிகங்களாகப் பாடிச் சிவபிரானுக்கு உரிய தோத்திரப் பாடலாக, ஒவ்வோர் ஊர்க் கோயிலுக்கும் உரிமை ஆக்கினார்.

''காழியுள் ஞான சம்பந்தன்
....................இடை மருதின்மேல்
பண்ணோடிசை பாடிய பத்தும்'' [1]

''கடம்பூரிற் காதலனைக் கடற்காழி
நடை நவில் ஞானசம்பந்தன் நன்மையால்
ஏந்திய பத்தும்'' [2]

''காழி மறை ஞானசம்பந்தன் மயிலாடு துறையைப்
புணர்ந்த தமிழ் பத்தும்'' [3]

என்பன முதலிய பதிக அடிகள் சான்று. இதுபற்றியே அவரும் பிற சமய குரவர் இருவரும் பாடிய ஊர்க்கோயில் கள் 'பாடல் பெற்ற தலங்கள்' ஆயின.

ஒவ்வோர் ஊரிலும் திருஞானசம்பந்தர் பாடிய பதிகப் பாடல்கள் சைவ சமயத்தைத் தமிழ் இயக்கமாகவே மக்களி டையில் பரப்பின. இயக்கப் பாடலின் தன்மைகள் அப்பாடல் களில் இருந்தன. ஞானசம்பந்தர், மக்கள் வாழும் ஊரையே பதிகத்தின் மையமாக அமைத்து, அவ்வவ்வூர் மக்களைத் தம் பாடலின்பால் ஈர்த்தமை, இயக்கத்தன்மைகளுள் தலையாயது. தத்தம் ஊரைச் சிறப்பித்துப் பாடியமையால் எவ்விடத்து மக்களும் அவரிடம் விருப்பம் கொண்டனர்.

அவர் பாடல்கள் மக்களை ஈர்த்தன. அவர் செல்லும் இடம் எல்லாம், மக்கள் கூட்டம் அவரைச் சுற்றித் திரண்டது. அவர் கூறிய கருத்துக்களை ஆர்வத்தோடு கேட்டது. அதற்குக் காரணம் அவர் பாடல்கள் இசைப் பாடல்கள் என்பதே. அவரைச் சேக்கிழார் 'முத்தமிழ் விரகர்' என்பார் 'கானத்தின் எழுபிறப்பு' என்பார் ''இசை முழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலை பெருகப் பாடியவர்'' என்பார்.

திருஞானசம்பந்தரின் பதிகங்களாகக் கிடைப்பவை 384 பதிகங்கள். அவை 22 பண்களை உடையவை என்று அறிகின்றோம்.[4] தமிழ்நாட்டில் தொல்காப்பியருக்கு முன் பிருந்தே வழங்கி வரும் தமிழிசையை ஞானசம்பந்தர் வளர்த் தார் என்பது மட்டும் அன்று. தம்முடைய இயக்கப் பாடல் களை இசைப் பாடல்களாக அவர் அமைத்தமைக்கு மற்றொரு காரணம் உண்டு.

சமண சமயத்தினர் துறவுக்குச் சிறப்பிடம் கொடுத்த மையால், துறவிக்கே வீடுபேறு எனக் கோட்பாடு கொண்ட மையால், இசை, நடனம் முதலிய நுண்கலைகள், மாந் தருக்கு இன்பச்சுவையை அளித்துத் துறவுணர்ச்சியைச் சிதைக்கும் எனக் கருதி, அவை மக்களுக்கு ஆகாதவை என விலக்கினர். திருஞானசம்பந்தர் காலத்திற்குப் பின் தோன்றிய 'யசோதர காவியம்' என்னும் சமணக் காப்பியத் துள், ஓர் அரசி தனது நிறையிழந்து, தொழு நோயாளன் ஒருவன் பால் ஆசை கொள்ளுதற்கு, அவன் பாடிய இசையே காரணம் எனச் சித்திரிக்கப்படுகின்றது.

ஆனால் தமிழ்க் கொள்கை அதுவன்று. தமிழ் மக்கள் வாழ்வில் இரண்டறக் கலந்தது இசை. ஐந்து நிலங்களுக்கும் உரிய சிறப்புப் பண்களை இனங் கண்டு, அகம், புறம் என்னும் இருவகை வாழ்விலும் இசையை வளர்த்தனர் தமிழர். இசையை மொழியோடு சேர்ந்த கல்வியாகவே பேணினர். அதனால்தான் 'முத்தமிழ்' என்னும் கோட் பாடு தோன்றிற்று.

திருஞான சம்பந்தர் அத்தகைய மரபில் இசையோடு பதிகம் பாடியமையால், தமிழிசையை வளர்த்தார். சமணக் கொள்கையால் அது நலியாவாறு காத்தார். அவ்வகையிலும் தமிழியக்கம் நடத்தினார். தமது இயக்கத்திற்கு ஆதாரமாக,

1) பதிகம் பாடுவதே இறை வழிபாடாக அமைந்துவிடும் என்றும்[5]

2) இறைவன் ''மோந்தை முழாக் குழல் தாளம் ஓர் வீணை முதிர ஓர் வாய் மூரி'' பாடுகின்றான் என்றும்[6]

3) இராவணன் கைலை மலையைப் பெயர்த்தெடுக்க முயன்றபோது வெகுண்டாலும், இறைவன் அவன்றன் நாவடைந்த பாடல் கேட்டு நயந்து அருள் செய்தான் என்றும்[7]

பிறவாறும் எடுத்துக் காட்டுகின்றார். இசையுடன் பதிகம் பாடுதலையே ஒரு வழிபாட்டு நெறியாக நிலை நாட்டினார்.

அவர் பாடல்கள் தமிழ் இயக்கத்தின் குரலாக அமைந்தமைக்கு மற்றொரு காரணம் அவற்றின் எளிமை. அவற்றின் சொல்லாட்சியும், நடையும் எளியனவாக உள்ளன. மன்னர் அவைக் களத்தையும் அறிஞர் ஆய்வுக் களத்தையும் விட்டுர மக்களிடம் தமிழை எடுத்துச் சென்றவர் ஞான சம்பந்தர். தமிழ் வாழ்வை மறுமலர்ச்சி பெறச் செய்வதற்காக, மக்கள் சக்தியைத் தமிழைக் கொண்டு தட்டியெழுப்பிப் பயன் கொண்டவர் அவர். ஆதலால் அவர் எளிமையாகவே பாட நேர்ந்தது. சங்க இலக்கியம், முதற் காப்பியங்கள் ஆகியவற்றின் நடைக்கும் அவர் பாடலின் நடைக்கும் பெரிய வேறுபாடு உள்ளது.

இயக்கம் நடத்துவோர், தாம் வலியுறுத்தும் கொள்கைகளை இடைவிடாமல் எடுத்துக் கூறுவர். ஞான சம்பந்தரின் பதிகம் ஒவ்வொன்றிலும், ஒரு குறிப்பிட்ட அமைப்பில், குறிப்பிட்ட மூன்று கொள்கைகளையே கூறிச் செல்கின்றார்.

1) எத்துணைப் பெரும் பிழை செய்யினும், உள்ளம் திருந்தி, அன்புடன் வழிபட்டால், சிவபெருமான் மன்னிப்பான்; அருளும் புரிவான்.

2) சிவபிரானே முழு முதற் கடவுள் (உலகிற்கு ஒருவனே பதி; அவன் சிவபிரானே)

) சிவபிரானை அடையும் நெறியே முத்தி நெறி, அதற்கு மாறாகச் சமணரும் பௌத்தரும் கூறும் கொள்கைகள் பொருந்தாதன. அவற்றைக் கொள்ளலாகாது.

என்பவையே அக்கொள்கைகள். இவற்றை அவர் பதிகந்தோறும் கூறி அனைத்து மக்களிடமும் வலியுறுத்துதலால், இவை அவரது இயக்கத்தின் தலையாய கோட்பாடுகள் எனலாம்.

இவற்றுள் முதற் கோட்பாடு சிவனே யாவர்க்கும் கதி. எல்லாப் பேறும், இறுதியில் வீடுபேறும் அளிக்கவல்ல பதி என்பதை உட்கொண்டது.

இரண்டாவது, சிவன் கடந்த பொருள் என்றும், அவனுக்கு இன்ன வடிவம், இன்ன நிறம் என்று கூறல் இயலாது என்றும், படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில் செய்யும் மூவர்க்கும் அவன் தலைவன் என்றும், அன்பால் வழிபடுவோர்க்கு அன்றியார்க்கும் புலப்படாதவன் என்றும் விளக்கம் பெறும்.

மூன்றாவது, சமண பௌத்த சமயக் கொள்கைகளும் கூற்றுகளும் மறுக்கத் தக்கவை என்பதை உட்கொண்டது. அக்கொள்கைகளுள் சிலவற்றை ஞானசம்பந்தர் மறுத்தலை இங்கு எடுத்துக்காட்டுவோம். அவரது இயக்கத்தின் தலையாய நோக்கம் இது. தமது கொள்கையில் தாம் கொண்ட உறுதிப்பாட்டை, ''கறைசேர் கண்டத் தெம்பெருமான் கழல் அல்லால் பேணாது உள்ளமே''* என அவர் தெளிவு செய்கின்றார். அவர் பரசமயம் நிராகரித்து நீறாக்கும் தன்மையை

உடையவர் எனச் சேக்கிழார் கூறுவார். 'பரசமய கோளரி' என்பது ஞானசம்பந்தரின் விருதுகளுள் ஒன்று. அவர் மதுரையில் சமணர்களுடன் வாதம் செய்ய முற்படும்பொழுது,

''ஞாலம்நின் புகழேமிக வேண்டும் தென்
ஆல வாயில் உறையும் எம் ஆதியே''[9]

எனத் தம் இயக்கத்தின் குறிக்கோளைப் புலப்படுத்துகின்றார்.

சமண சமயத்தார் கடவுள் உண்டா என்றும் வினாவிற்கு, 'உண்டுமாம்; இல்லையுமாம்' என விடை பகர்வர், ஆனால், உலகைப் படைத்தவன் ஒருவன் இல்லை என்பர். உலகம் பரமாணுக்களின் சேர்க்கையால் உளதாயிற்று என்பர் திருஞானசம்பந்தர் 'தெற்றென்று தெய்வம் தெளியார்' என அவர்களைக் கண்டனம் செய்து,[10] காலம் என்றும் தத்துவத்தையும், கால வரையறைக்கு உட்பட்டுத் தோன்றி, நின்று, அழியும் உலகத்தையும் பிற தத்துவங்களையும் படைத்தவன் உளன் என்பதை,

''கழிகாலம் எல்லாம் படைத்த
இவர் அவர் என்று இறைஞ்சிப் பிரமாபுரம்
ஏத்துமினே''[11]

என்று கூறி மக்களுக்கு அறிவுறுத்துகின்றார். தத்துவங்கள் (உலகின் மூலக் கூறுகள்) அழியும் தன்மையவை எனக் 'கழி' என்னும் அடைமொழியால் புலப்படுத்தி, மற்றோர் இடத்தில், அவற்றை அழிப்பவன் சிவனே என்பதை, ''ஆதியும் ஈறும் ஆய எம் அடிகள்''[12] எனக் கூறுகின்றார். மற்றும் சிவபிரான் முத்தொழிலையும், உயிர்கள் வீடுபேறாகிய பயனைப் பெறும் பொருட்டுச் செய்கின்றான் என்பதையும், அவ்வீடுபேறு அவனது திருவடியை அடைதலே என்பதையும், ''படைப்பு, நிலை, இறுதிப் பயன்''[13] என்றும், ''சிவனடி நண்ணுவர்தாமே''[14] என்றும் மொழிகின்றார்.

இவ்வீடுபேற்றை 'யாரும் தாமாக எய்தல் இயலாது; சிவபெருமானே அதனைத் தருவதற்கு உரியன் என்பதைச்

'சென்றடையாத திருவுடையானை'[15] என்பதால் குறிக்கின்றார். இது 'அருளல்' என்னும் அவனது தொழில் ஆகும்.

வீடுபேறு பற்றிய சமண சமயக் கொள்கை, கடவுளை அதில் தொடர்பு படுத்துவது அன்று. விரதங்களாலும் ஞானத்தாலும் பக்குவம் பெறும் உயிர், பிறவி வட்டத்திலிருந்து நீங்கி, பொன்னெயில் வட்டம் எனப்படும் வானுலகை அடையும். அதுவே முடிவிலா இன்பம்தரும் அழிவிலா நிலையாகிய வீடுபேறு என்பது அவர்தம் கொள்கை. இதனை மேற்கூறியவற்றால் ஞானசம்பந்தர் மறுத்துரைக்கின்றார். இதனை,

''சாக்கியர் சமண்படு கையர் பொய்ம் மொழி ஆக்கிய
உரைகொளேல், அருந்திரு நமக்கு ஆக்கிய அரன்''[16]

என்றும் அடிகளிலும் கூறுகின்றார்.

அடுத்துத் திருஞானசம்பந்தர் இல்லறம், துறவறம் பற்றிய சமணக் கோட்பாட்டை மறுக்கின்றார். இல்லறத்தார் வீடு பெற இயலாது; பெண்களும் அதைப் பெற வியலாது. துறவிகள் தாம் பெறலாம் என்பது சமணக் கோட்பாடு. துறவு மேற்கொண்டு விரதங்களால் உடம்பை ஒறுக்க வேண்டும் என்பது அவர்கள் காட்டிய வழிமுறை.

திருஞான சப்பந்தர் மக்களை நோக்கி, ''வீடும் ஞானமும் விரும்பினால், அவற்றைப் பெறக் கருதி விரதங்களை மேற்கொண்டால், உடம்பு வாடி மெலிவதல்லாமல் ஞானம் வரும் என்பது எவ்வாறு?[17] என்று வினவுகின்றார். ''பிறப்பாகிய துன்பத்தைப் போக்க விரும்புவோரே, கேளுங்கள்: ஆரூரில் அடியார் மேல் அன்பு கொண்டு எழுந்தருளியுள்ள இறைவனை அன்பினோடு மலர் தூவி வழிபட்டால் பிறவித் துன்பம் நீங்கும்; வீடு பேராகிய பேரின்பம் கிடைக்கும்'' என்று கூறுகின்றார்.[18]

மேலும், இல்லறத்தில் இனிது வாழலாம் வீடுபேறு அடைவதற்கு எத்தடையும் இல்லை. சிவபெருமான் உமையவளோடு வீற்றிருக்கின்றார்[19] என்றும், அன்பால் பாடல் பாடி வழிபடுவதே இறைவன் அருளைப் பெறும் சாதனம்[20] என்றும் கூறுகின்றார். உமையவளோடு வீற்றிருத்தல், கருணையோடு இருத்தலைக் குறிக்கும். இறைவன் நமக்கு அருள் தருவதற்குத் தூண்டும் பண்பு, அவனது கருணை. அதனை நாம் பெறுவதற்கு உதவும் சாதனம் அன்பு நெறியும் நெஞ்சம் உருகிப் பாடுதலும்.

மகளிர் திருவருளுக்குத் தகுதியுடையராதலை,

''ஏலமலி குழலார் இசைபாடி எழுந்து அருளாற் சென்று
சோலைமலி சுனையில் குடைந்தாடித் துதி செய்ய''[21]

என்றும் அடிகளில் குறிப்பிடுகின்றார். அந்த அருளே அவர்களை வீடுபேறு அடைவிக்கும் என்பது குறிப்பு. சைவ சமயத்தில் மகளிர் வீடுபேறு எய்தியமைக்குக் காரைக் காலம்மையார் முதலிய பலர் சான்றாவர். அத்தகைய சிறப்புடைய 'அம்மையார் தலையால் நடந்த திருவாலங் காட்டில் யான் காலால் மிதியேன்' என்று ஞானசம்பந்தர் அவ்வூரினுட் செல்லவில்லை.

சமண சமயத்தின் கோட்பாடுகளுள் வன்மைமிக்கது வினைக் கோட்பாடு. வினைகளைச் செய்தோர் அவற்றின் பயனை அனுபவித்தாலன்றி, அவ்வினைப் பயனால் பிறவி உண்டாதல் நிற்காது. துறவு மேற்கொண்டு, முற்பிறவிகளில் செய்த வினைகளின் பயனை அனுபவித்து, மேலும் புதுவினைப் பயன் சேராதவாறு, நல்லறங்கள் செய்தும், விரதங்களால் உடலை ஒறுத்தும், உள்ளத்தை ஒடுக்கியும் வந்தால், இறுதியில் வீடுபேறு என்றும் தூயநிலை கிடைக்கும், அதை நாமே முயன்று எய்தல் வேண்டும் என்பது இக் கோட்பாட்டின் விளக்கம்.

ஞான சம்பந்தர் இதனை மறுக்கின்றார். அரங்கள் செய்வதும் நல்வினைப் பயனை உண்டாக்கும். அதனை

அனுபவித் தற்குப் பிறவி எடுத்தேயாக வேண்டும். ஆதலால் அறம் செய்தால் தூயநிலை வந்து எய்தும் என்பது பொருந் தாது.

அன்றியும், வினைப் பயன் சடப் பொருள்; அறிவற்றது. ஆதலின் தன்னைச் செய்தவனைத் தானே சென்று அடையாது. வினையச் செய்தவனோடு, அதன் பயனைச் சேர்ப்பவன் இறைவன் என்னும் கருத்து அமைய, ''விதிதான் வினைதான்... நெல்லிக்காவுள் நிலாயவனே''[22] எனக் கூறுகின்றார். அவனைச் சரண் அடைதலே செய்யத் தக்கது என்று தெரிவிக்கின்றார்.

அவ்வாறு சரணடைவதால் அவன் நம் வினைப் பயனை நீக்குவான் என்பதில் என்ன நியாயம் இருக்கிறது என்ற வினா எழும் இதற்கு ஞான சம்பந்தர் விடை தருகின்றார்.

இறைவன் நம்முள்ளே இருக்கின்றான். உயிர் உடலில் தங்கி, அதனை இயக்குதலைப் போல, உயிரில் இறைவன் தங்கி அதன் அறிவுக்கு அறிவாக உள்ளான்'.

''உடல் வரையின் உயிர் வாழ்க்கையாய ஒருவன்''[23] எனவே, அவனைச் சரணடைந்தால், அவனிடம் அபயம் கேட்டால், தீவினைப் பயனால் துன்பம் வராது. மற்ற வினைப் பயன்களும் நீங்கும்.''

''ஒருவன் கழல் எத்த
இடர் தொடரா வினையாயின சிந்தும் இறைவன்
அருளாமே''[24]

என்று கூறுகின்றார் மற்றொரு பதிகத்தில், ''மலை மகள் கணவனது அடியின் நிழலே சரணாக நினைபவர் வினைநலிவிலரே''[25] என்கின்றார். பிறிதொரு பதிகத்தில், 'பிறவியை ஒழிக்க வேண்டும் என்று முயல்கின்றார்களே, வினைகளால்தான் பிறவிகள் தொடர்கின்றன. வினைப் பயன்களைத் துறத்தல் உங்களால் இயலாது. ஆனால்,

ஆரூரில் எழுந்தருளியுள்ள அறத்தின் வடிவமான சிவபெருமானை மறவாது பரவி வழிபடுக அப்பொழுது வினைப்பயன்களைத் துறக்க இயலும்' என்று கூறுகின்றார்.

''பிறவி அறுப்பீர்காள் அறவன் ஆரூரை
மறவா தேத்து மின் துறவி ஆகுமே'' 26

சிவபிரான் அறத்திற்கு மூலமாதலின் 'அறவன்' என்றார். திருநாவுக்கரசர் சிவபெருமான் தமக்குக் காட்டிய வழியைத் ''தயா மூல தன்மவழி'' என்பார். தயா, கருணை அதற்கு மூலமாயுள்ளவன் சிவபெருமான். அவன்வழி நிற்பதே - அவனது திருவுள்ளப்படி வாழ்வதே-தயா மூல தன்மம் ஆகும். எனவே அறவன் வழிநின்று அனைத்து வினைகளையும் செய்தால் அவற்றின் பயன் நம்மைத் தொடராது. இக்கருத்தில் மற்றோர் அழகிய பாடலைத் தருகின்றார் ஞானசம்பந்தர்.

''பிறவியால் வருவன கேடுள ஆதலால் பெரிய இன்பத்
துறவியார்க்கு அல்லது துன்பம் நீங்காது எனத்தூங்கினாயே
மறவல்நீ மார்க்கமே நண்ணினாய் தீர்த்தநீர் மல்கு சென்னி
அறவன் ஆரூர் தொழுது உய்யலாம் மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே'' 27

என்பது அப்பாடல் 'துறவு மேற்கொள்ளா விட்டாலும், நல்ல நெறியையே கைக்கொண்டிருக்கின்றாய் எனத் தமது நெஞ்சிற்குக் கூறுவது போல மக்களுக்குக் கூறுகின்றார். அந்த நெறி என்ன வென்றால் இறைவன் வழி நிற்பதாகும். அதற்குத் **திருத்தொண்டு நெறி** எனப் பெயர் சூட்டினார். அந்த நெறியைப் பரப்புதற்கே இயக்கம் நடத்தினார்.

''துக்க மிக்க வாழ்க்கையின் சோர்வினைத்துறந்து நீர்
தக்கதோர் நெறியினைச் சார்தல் செய்யப் போதுமின்'' 28

என்று, அந்நெறிக்கு மக்களை அறைகூவி அழைத்தார். ''தொண்டராய் ஏந்த வல்லார் துயர் தோன்றாவே'' என்று[28] அ அவர்கட்கு உறுதியளித்தார். ''இறைவன் தொண்டரோடு கூடிக் கலந்து நின்றான். நாமும் அவ்வழி யைப் பின் பற்றுவோம்''[29] என்று அந்நெறியால் பெறக் கூடிய ஆன்மீக நன்மையை எடுத்துக் கூறினார்.

உயிர்களுக்குப் பிறவி தெடர்ந்து வருவதற்குக் காரணம் வினைப்பயன் மட்டும் அன்று ஆணவம், மாயை என்றும் காரணங்களும் உள்ளன. இம்மூன்றையும் சைவ சமயம் மும்மலம் எனக்கூறும். உயிரை விட்டு இம் மும்மலமும் நீங்கினால்தான், அதற்குப் பிறவிச் சங்கிலி அறுபடும். சிவபிரான் மும்மலங்களையும் நீக்குபவன்; அவன் ஒருவனே நீக்குபவன் என்பதனைச் சம்பந்தர் புராணக்கதை ஒன்றைக் குறிப்பிடுவதன் மூலமாகப் புலப்படுத்துகின்றார்.

சிவபெருமான் அசுரர் ஆட்சி புரிந்த முப்புரங்களையும் எரித்து அழித்தான் என்பது புராணம் இதனைச்சமண பௌத்தரை மறுக்கும் பாடலில் அமைத்து, மக்களை நோக்கி,

''மாசுமெய்யர் மண்டைத் தேரர் குண்டர் குணமிலிகள்
பேசும் பேச்சை மெய்யென்றெண்ணி அந்நெறி
செல்லன்மின்
மூசுவண்டார் கொன்றைசூடி மும்மதிளும் உடனே
நாசம் செய்த நம்பெருமான் மேயது நள்ளாறே''[30]

எனக் கூறுகின்றார் மும்மதில்களையும்

எரிந்தமை, மும்மலங்கையும் அழித்தலுக்குரிய குறி யீடாகச் சைவசமயம் கொள்ளும். திரிபுரம் எரித்த வர லாற்றை யசுர் வேதமும் சரபோலநிடதமும் பிற புராணங் களும் கூறுதலைச் செந்திநாதையர் எடுத்துக்காட்டு கின்றார்[31] மும்மலநாசம் செய்தால்தான் பிறவி அறும். அதைச் செய்பவன் சிவபெருமான் ஒருவனே. ஆதலால் அவ னைச் சார்தலாகிய நெறியை விட்டு வேறு நெறிகளில் சேராதீர் என்று மக்களுக்கு அறிவுறுத்தினார்.

அடுத்து அவர், வேதத்தையும் வேள்வியையும் மறுக்கும் சமண, பௌத்தக் கோட்பாடுகளைக் கண்டனம் செய்கின்றார்.[32] வேதமும் வேதாந்தம் ஆகிய உபநிடதங்களும் கூறும் பரம்பொருள் சிவபெருமானே என ஆகமங்களும் தமிழ்ச் சைவ நூல்களும் கொள்ளும். வேதங்களைத் தொகுத்து ஆராயந்தமையாலும், உபநிடத முனிவர்களின் ஆராய்ச்சியாலும் பரம்பொருள் உண்மை அறிந்து தெளியப் பட்டது. இதனை ஞானசம்பந்தர், ''மறை ஓதிய ஒண் பொருளாகி நின்றான்'' எனக் குறிப்பிடுகின்றார்.[33] ''தொகுத்தவன் அருமறை ஆறங்கம், ஆகமம் வகுத் தவன்''[34] என்றும்,'' விரித்தவன் அருமறை ''என்றும்,[35] ''வேத வேதாந்தன்''[36] என்றும் கூறுகின்றார். வேதம் பொது; ஆகமம் சிறப்பு எனச் சைவ நெறியினர் கொள்வர். வேதத்தில் பொதுவாகக் கூறப்படும் ஆன்மீக உண்மைகள், ஆகமத்தில் சிவபரமாக வகுத்துக் கூறப்பட்டுள்ளன. எனவே வேதம் அடிமரம் என்றும் சைவம் கிளை என்றும் கொண்டு வேதத்திற்குப் புறம்பான சமண பௌத்த நெறிகளைச் சம்பந்தர் கண்டனம் செய்கின்றார்.

ஆகமங்கள் சைவ சமயக் கோட்பாடுகளைக் கூறினாலும், தமிழில் சம்பந்தர் முதலிய திருமுறை ஆசிரியர்களே தமது கலை ஞானத்தாலும் அனுபவ ஞானத்தாலும் சைவ சமய உண்மைகளையும் சைவ வாழ்வையும், கோட்பாடுகளையும் தெளிவாக ஒருமுகப்படுத்தி எடுத்துக் கூறியவர்கள்,[36] அ அவர்களுள்முதன்மையுடையவர்ஞானசம்பந்தர்.

தேவம் சைவத்திற்கு முதனூல் எனக் கொண்டாலும் தமிழ் மொழியை தேவத்தோடு ஒத்த சிறப்புடையதாகக் கொண்டார் ஞானசம்பந்தர். அவர் காலம் பல்லவப் பேரரசர் ஆட்சி புரிந்த காலம். அவர்களது ஆட்சியில் வடமொழிக் கல்விக்கும் வடமொழிச் சரித்திரக் கல்விக்கும் பேராதரவு அளிக்கப்பட்டது. வைதிக நெறியாளரும், சமணரும், பௌத்தரும் வடமொழியைப் பரப்பி வளர்த்

தனர். வேத, வேதாந்த ஆராய்ச்சிகளில் மிகுதியாகச் செய்யப்பட்டன.

இச்சூழலில் ஞானசம்பந்தர் தமிழியக்கம் நடத்தித் தமிழின் சிறப்பையும் பெருமையையும் நாடறியச் செய்த தோடு, தாமே மிகச் சிறந்த கவிஞராக விளங்கி சிறந்த பதிக இலக்கியத்தைப் படைத்து அளித்தார். அவை அவரது மெய்யுணர்வு அனுபவத்தின் வெளிப்பாடு ஆதலின் வேதத்தை ஒத்த சிறப்புடையவை. 'எழுதும் மறை' என்றே சேக்கிழார் அவற்றைக் குறிப்பிடுவார். சம்பந்தர் பதிகங்களைப் பாடியது மட்டுமன்றி, அவற்றின் அன்புமிகுதி நோக்கி, இறைவனும் மகிழ்ந்து ஏற்கச் செய்தார். அதனை மக்களுக்கும் தெரிவித்தார்.

1) ''தம் மலரடி ஒன்று அடியவர் பரவத்
தமிழ்ச் சொலும் வடசொலும் தாள் நிழற்சேர''[37]

ஞானசம்பந்தர் தமது மூன்றாண்டுப் பருவத்தில் உயிருணர்வைத் தந்து, அம்மையப்பனாகக் காட்சிதந்து, அருளனுபவத்தையும் ஞானத்தையும் தந்து, தமிழ்ப் பதிகம் பாடும் உணர்வையும் ஆற்றலையும் தந்து, அந்த நிலையிலேயே நாயகி நிலை உணர்வையும் தந்து இறைவனைத் தலந்தோறும் தமிழால் பாடும் வாய்ப்பைப் பெற்றமையால், தம்மைத் தமிழோடு தொடர்பு படுத்தித் 'தமிழ் ஞான சம்பந்தன்' என்றும்[38] தமது பதிகத்தை 'ஞானசம்பந்தன் செந்தமிழ்' என்றும்[39] கூறிக்கொள்கின்றார்.

தமிழ் மொழியும், மரபும் நெறியும் வாழத் திருஞான சம்பந்தர் செய்த தொண்டுகளைப் பின் வரும் இயல்புகளில் காண்போம்.

அவர்தம் பதிகங்கள் இயக்கப் பாடல் தன்மையுடையவை எனக் காட்டும் இவ்வியலின் முத்தாய்ப்பாக, அவர் பதிகந்தோறும் பாடும் திருக்கடைக்காப்புப் பாடல்கள் சிலவற்றைச் சுட்டிக்காட்டி அமைவோம்.

இப்பாடல்கள் தாம் அமைந்த பதிகங்களை ஓதி இறைவனை வழிபடுவதால் மக்கள் பெறும் நற்பேறுகள் யாவை என்று உறுதிசெய்து கூறுவனவாகும். வடமொழியில் இத்தகைய பாடல்களைப் பலஸ்ருதி என்பர். திருக்கடைக் காப்பு என்னும் பெயர். அதைவிடப் பொருள் நலம் வாய்ந்தது. பொதுவாக நூலுக்கு உரிய காப்புச் செய்யுள் முதற்கண் அமைந்திருக்கும். இவை அவ்வாறு அன்றி இறுதியில் அமைந்தமை பற்றித் திருக்கடைக்காப்பு எனப் பட்டன. இவை பதிகத்திற்கு உரிய காப்புச் செய்யுள் அல்ல; அவற்றை ஓதுபவர்க்கு இன்ன நற்பேறு வாய்க்கும் என உறுதி செய்வதால், அவர்களுக்குரிய காப்பு, மக்களது முழுவாழ்வின் பயனாகப் பெறத்தக்க நற்பேறுகளைத் தருதலாலும் திருக்கடைக்காப்பு என்றும் பெயர் பொருத்தமானதாகும்.

இப்பதிகங்களைப் பயில்வோர் ''சிவகதியைப் பெறுவாரே''; ''எளிதாம் பிறவா வகை வீடே''; ''ஈசனோடே மன்னியிருப்பாரே''; ''நெஞ்சிருளும் நீங்கி அருள் பெற்று வாழ்வாரே,'' என்ற உறுதி மொழிகளை நோக்கினால்' அவை ஆணைமொழிகளாகவும் விளங்குவதை அறியலாம்.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழிதானே மந்திரம் என்ப''

என்றும் தொல்காப்பியத்திற்கு ஏற்ப, ஞானசம்பந்தர் அனைத்துப் பதிகங்களையும் ஆணையோடு மொழிகின்றார் எனினும், சிலவற்றில் அதனை வெளிப்படையாகவே கூறுகின்றார்.

1) ''எந்தை நனிபள்ளி உள்க
வினைகெடுதல் ஆணை நமதே''[40]

2) ஞானசம் பந்தன் நற்றமிழ் மாலை
நன்மையா லுரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி

உள்ளமும் ஒரு வழிக்கொண்டு
வானிடை வாழ்வர் மண் மிசைப் பிறவார்
மற்றிதற்கு ஆணையும் நமதே''[41]

தொல்காப்பியர் குறிப்பிடுதற்கு ஏற்பச் சம்பந்தர் நிறை மொழி மாந்தருள் தலையாயவர் என்பது அவர் கூறும் ஆணையாலேயே தெரியவரும். அவர் பதிகங்கள் தமது பயனைத் தந்தே விடும் என்பதனை அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளே மெய்ப்பிக்கின்றன. தமிழுக்குச் சொல்நலம், பொருள் ஆழம் மட்டும் அன்றி, வேதம் போல மந்திர ஆற்றலும் உண்டு என்பதை அவர் வெளிப்படுத்தினார்.

சைவ சமயமும் தமிழ் மொழியும் நலிய இருந்த காலத்தில் அவை மறுமலர்ச்சி பெற ஞானசம்பந்தர் தமிழ் இயக்கம் நடத்திய சிறப்பு மிக்க பெருஞ் செயலை மனத்துட் கொண்டே நம்பியாண்டார் நம்பி.,

''ஆற தேறும் சடையான் அருள்மேலே அவனியர்க்கு
வீற தேறும் தமிழால் வழிகண்டவன்''[42]

என்று அவரைப் போற்றிகின்றார். சைவநெறி சம்பந்தரின் தமிழால் புது வீறு பெற்று வளர்ந்தது என்றும் தமிழ் மொழியைக் கொண்டே வழிபட்டு சிவபிரானது அருளை அடையாளம் என்று சம்பந்தர் உலகுக்கு எடுத்துக்காட்டினார். என்றும் இங்கு நம்பியாண்டார் நம்பி போற்றுகின்றார் மேலும், சிவபிரானைவழிபடும் நெறியாகப் 'பதிகப் பெருவழி' காட்டியவர் என்றும் குறிப்பிடுகின்றார்.[43]

அவர் கூறுவது போல் திருஞானசம்பந்தர் ஒரு புது வழி பாட்டு முறையை உண்டாக்கினார். அந்த முறையில், பாடல்நெறி, ஆடல்நெறி, பக்திநெறி, யோகநெறி, ஞான நெறி ஆகிய அனைத்தும் ஒருங்கு இணைந்துள்ளன. அதனைப் பின் வரும் இயல்களுள் காண்போம்.

## அடிக் குறிப்புகள்

1. முதல் திருமுறை 32 ஆம் பதிகம் : 11 ஆம் பாடல்
2. 2 ஆம் ,, 68 ,, ,, ,, ,, ,,
3. 3 ,, ,, 70 ,, ,, ,, ,, ,,
4. தருமபுர ஆதீனம் 1953, 54, 55 ஆம் ஆண்டுப் பதிப்புகளின் படி

5. 1 : 105 : 11
6. 1 : 44 : 5
7. 1 : 48 : 8
8. 1 : 80 : 6
9. 3 : 108
10. 3 : 54 : 11
11. 3 : 56 : 10
12. 1 : 77 : 10
13. 1 : 9 : 2
14. 1 : 41 : 11
15. 1 : 98 : 1
16. 3 : 21 : 10
17. 2 : 2 : 11
18. 1 : 91 : 3
19. 3 : 24 : 1, 8
20. "படை நவில் பாடல், 2 : 68 : 11
21. 2 : 19 : 2
22. 23. 3 : 105 : 1
24. 2 : 91 : 4
25. 1 : 91 : 2
26. 2 : 79 : 5
27. 2 : 99 : 3
28. 2 : 14 : 10

28.அ "தொண்டோடு கூடித் துதைந்து நின்ற
தொடர்பைத் தொடர்வோமே" 3 : 106 : 6

29. 1 : 49 : 10
30. காசிவாசி செந்திரானதயர், தேவாரம் வேதசாரம் பக்கம் -242–246
31. 3 : 108 : 1
32. 3 : 12 : 1
33. 3 : 23: 6
34. 3 : 23: 7
35. 3 : 35: 4
36. முரு. பழ. இரத்தினம் செட்டியார், திருவாசகச்சுவை அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1988 பக். 3-4
36. அ 1 : 77 : 4
37. 1.13, 11
38. 1 : 41 : 11
39. 2 : 84 : 11
40. 3 : 118 : 11
41. பதினோராம் திருமுறை, ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் :5
42. ,, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி : 2

2

# அகமும் புறமும் ஒன்றானார்

வழிபாடு செய்வதற்குரிய தீக்கை பெறுவோர் அது காறும் தாங்கிய இயற்பெயரோடு, தீக்கைப் பெயரும் சூட்டப்பெறுவர். இயற்பெயர் புறவாழ்க்கையில் வழங்கும் பெயரெனின், தீக்கைப்பெயர் அகவாழ்க்கைக்கு உரிய பெயர் ஆகும். திருஞானசம்பந்தருக்குப் புறவாழ்க்கைப் பெயர் யாதும் சேக்கிழாரால் குறிக்கப்படவில்லை. இறைவனால் கைலை மலையில் 'அம்மையே' என அழைக்கப் பெற்றமையால் 'காரைக்காலம்மையார்' என வழங்கப் பெற்றவரின் இயற்பெயர் புனிதவதியார் எனக்குறிப்பிடுதல் போலத் திருஞானசம்பந்தரின் இயற்பெயரை அவர் குறிப்பிட வில்லை.

> ''தவம் பெருக்கும் சண்பையிலே தாவில் சராசரங்கள் எலாம்
>
> சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்''[1]

என்றே பாடுகின்றார். பிள்ளையார் என்பது உலகியல் நோக்கில் மகன் என்றும் அருளியல் நோக்கில் இறைவனோடு மகன்மை உறவு (சற்புத்திர பாவம்) கொண்டவர் என்றும் பொருள்படும். ஆதலின் அது இயற்பெயர் அன்று, அவர் இறைவனால் அருள் செய்யப்பட்டபோது பெற்ற சிறப்புப் பெயர் சிவஞானசம்பந்தர் என்பது.[2] இப்பெயரே ஞான சம்பந்தர் எனக்குறுகி, பின்னர் அடைமொழி பெற்றுத் திருஞானசம்பந்தர் என வழங்கிற்று.

இப்பெயர் அவரது அகவாழ்க்கைக்கு உரிய பெயராகும். பிள்ளை பிறந்த ஓராண்டில் பெயர்சூட்டுதல் மரபாதலின் அவருக்கு இயற்பெயர் இருந்திருக்கவேண்டும். அது அவரது திருத்தொண்டின் சிறப்பால், மூன்றாம் வயதிலேயே இறைவனால் ஞானம் அளிக்கப்பெற்ற அருமையால், அவர் நடத்திய இயக்கத்தால், அவரது ஞானச்சிறப்பால், திருஞானசம்பந்தர் என்னும் சிறப்புப் பெயரினுள் மறைந்து விட்டது. அகமே புறமாயிற்று!

அவர் மழவிளம் பருவத்திலே சிவஞானம் வழங்கப் பெற்று, அருள் பெருகும் அக வாழ்வு உடையவராய் விளங்கியதுடன், புறவாழ்வில் வேறு செயலை மேற்கொள்ளாமல், சிவஞானத்தை மக்களிடையே பரப்பினார். தமது உள்ளத்தில் நிறைந்த அருளுக்கு ஒப்பவே, புறத்திலும் இயற்கைக் காட்சிகள், உயிரினங்களின் வாழ்க்கை, செயல், மக்களின் செயல், உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் முதலிய அனைத்திலும் சிவமே விளங்குவதைக் கண்டார். அவர் அகம் வேறு புறம் வேறாக வாழவில்லை. இரண்டும் ஒன்றாகப் பெற்றார்.

ஞானசம்பந்தர் சைவசமய ஆசிரியர்தாம். ஆனால் அவர் சமயாசிரியர் போல நூலியற்ற வில்லை. சைவ சமயத் தத்துவங்களைத் தெளிவாகக் கூறுகின்றார். ஆனால் தத்துவ நெறியாளர் போலத் தருக்க நடையில் பேசவில்லை. மிகச் சிறந்த கவிஞராக நின்று, தாம் அகமும் புறமும் ஒன்றாக வாழ்ந்து உணர்ந்தவற்றைக் கவிதையாகப் படைத்துத் தந்துள்ளார்.

அவர் ஒரு சமய அருளியற் கவிஞர் (Religous Mystic poet) ஆவார். அவரே கூறுதல் போல, அவருக்கு முன்னைப் பிறவியின் தொடர்ச்சியாக இறைவனிடம் தீவிரமான அன்பு இருந்தது. அதனாலேயே மூன்றாம் வயதில், வயிற்றுப்பசி அவர்க்கு ஆன்மீகப் பசியாகவும் அவர் அறியாமல் செயற்

பட்டது. புறம் அகமாயிற்று! சீகாழித் தோணிபுர விமானத் தைப் பார்த்து 'அம்மே, அப்பா' என அழுதார். அது ஆன் மாவின் அழைப்பாக இறைவனுக்குக் கேட்டது. அவனது அருளால், அவரது உயிருணர்வு விழிப்புக் கொண்டது. அருளியற் காட்சியும் அனுபவமும், அதன் பயனாகச் சிவஞானமும் பெற்றார். அவர் கண்ட காட்சி அம்மையப்ப னாக நின்ற சிவத்தின் காட்சி. பெற்ற அனுபவம் இறைவன்-இறைவியின் 'கேடில் பரங்கருணையும்', திருவருட் செல் வமும்.

இவற்றின் விளைவாக, அவரது பருவத்தையும் மீறி, உலகியல்புக்கு மாறாக, அவருள்ளத்தில் இறைவனிடம் மிக்க தீவிரமான அன்பு எழுந்தது. முன்னைப் பிறப்பில் பெற்றிருக்கக் கூடிய ஞானம் நினைவில் படர்ந்தது. அத் துடன் கவிதை செய்யும் ஆற்றலும் வந்தமைந்தது. அன்பும் ஞானமும் இப்பொழுது பெற்ற அருளியல் அனுபவமும் கவிதையாக அவரிடம் வெளிப்பட்டன. பாடிய முதற் பதி கத்தின் திருக்கடைக் காப்பில், தனது அன்பை, 'ஒரு நெறிய மனம்' என்றும், உயிருணர்வால் சிவத்தை அம்மையப்ப ராகக் கண்டு அகத்தே அனுபவித்தமைய, 'உணர்'. அவ் வாறு உணர்ந்தமையால் தமக்குச் சிவஞானத்தோடு-இறைவனே குருவாக வந்து உணர்த்தும் பதிஞானத்தோடு-தொடர்பு உண்டாயினமையால் தம்மை 'ஞானசம்பந்தன்' என்றும் கூறுகின்றார்.

'சைவம் என்பது சிவத்தோடு சம்பந்தம் ஆவது' என் பார் திருமூலர். அதன்படி சைவராகவே வாழ்க்கை தொடங் கினார் ஞானசம்பந்தர். அவர் பாடிய முதற் பதிகமே 'காதல் கொண்ட நாயகியாக' நின்ற அவருக்கும் நாயகனா கிய சிவபிரானுக்கும் உள்ள காதற் சம்பந்தத்தைப் பற்றிய தாக அமைந்தது. ஆதலின் அது நாயகி நிலை அருளியற் (Bridal Mysticism) கவிதை ஆகும்.

அருளியல் அனுபவம் என்பது மாந்தர் இறைவனோடு கொள்ளும் உறவில் உண்டாகும். அவர்களது அனுபவமா

கும். அது இத்தகையது எனச் சொற்களால், கவிதையால் உணர்த்த இயலாதது. ஆகவே அருளியலாளர் தமது அனுபவத்தை வெளியிட்டுக் கூற, இறையுறவில் தங்கள் நெருக்கத்திற்குத் தக்கவாறு, குறியீடுகளைப் (Symbols) பயன்படுத்துவர். 'நாயகி-நாயக பாவம்' என்பது அவற்றுள் ஒரு குறியீடு. இவ்வகையில் தமது அனுபவத்தைக் காதல் மொழியில் வெளியிடுவர்.

சம்பந்தர் அர்த்த நாரீசுர வடிவத்தில் தோன்றிய இறைவனது அழகிலும், அன்பிலும், இனிமையிலும் உள்ளத்தைப் பறிகொடுத்தார். அவர் மனத்தில் வேறு நினைவு இல்லாத வண்ணம் அவனே நிறைந்து நின்றான். அதனை, 'உள்ளங் கவர் கள்வன்' என்ற அழகிய தொடரால் குறிப்பிடுகின்றார். ''என்னை அறியாமலே என் ஆன்மாவிற்குத் தலைவனாகி, என்னை உரிமையாக்கிக் கொண்டான்'' என்று அவர் கூறுவது போல் இருக்கிறது. சைவ சமயம் 'ஆளாதல்' (அடிமையாதல்) என்று கூறுவது இதுதானே! கள்வன் என்பவன் வேறு செயல் செய்பவன் போல வந்து, தன் எண்ணத்தை மறைத்து நின்று, அதன்படியே செயல் முடிப்பவன் ஆவான். 'சிவபெருமான் சுடலையில் ஆடுபவன் போலவும், பிச்சையேற்பவன் போலவும் தோன்றினாலும்,[3] தன் அழகால் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டான். ஆதலின் அவன் 'கள்வன்' என்றார்.

அம்மையப்பனாக அருட்காட்சி தோன்றியதை அடுத்தே பிட்சாடான வடிவமும் சம்பந்தரின் அகக் கண்ணுக்குத் தோன்றிற்றுப் போலும்! சிவபெருமான் பிரமனின் ஐந்து தலைகளுள் ஒன்றைக் கிள்ளி அத்தலையோட்டினையே பிச்சைக் கலமாக ஏந்தித் தாருகவனத்து முனிவரின் மனைவியரிடம் பிச்சைக்குச் சென்ற கதை அவருக்கு அப்போது எப்படித் தெரிந்திருந்தது என்பது வியப்புக்கு உரியதே ஆகும். தனது முன்னைய பிறப்பில் செய்த வழிபாடு நினைவிற்கு வந்ததே போல, இக்கதையும் இம் முதற் பதிகத்தில் எடுத்தாலும் பிறகதைகளும் மட்டும் அன்றி அகப் பொருள் மரபும் அவர் நினைவிற்கு வந்தன எனக் கருதலாம்.

அவர் தம்மைத் தலைவியாகப் பாவித்துக் கொண்டமைக்கு ஏற்பக் காதலால் உடல் மெலிந்தமையையும், கைவளைகள் கழன்றமையையும் பாடுகின்றார்.[4] தேக உணர்ச்சி இன்மையையும், உலகியல்உறவு பற்றிய உணர்ச்சி இன்மையையும் இவ்வாறு வெளியிடுகின்றாரா?

அன்று தொடங்கிய அவரது இறையன்பு மேலும் வளர்ந்தது. இறைவனைக் காணவேண்டும் என்ற வேட்கையும் கூடும். வேட்கையும் வளர்ந்தன. அவனோ கருணை பாலிக்க விலலை. அவனிடம் தன் நிலைமையைக் கூறுமாறு வண்டு, குருகு, அன்னம் முதலிய பறவைகளைத் தூது விடுக்கும் முறையில் (துறையில்) பதிகம் பாடினார். அதில் ஒரு பாடல்:

வயல்களின் இடையே வாவியில், மலர்ந்த தாமரையின் மீது ஆணும் பெண்ணுமாக இரண்டு அன்னங்கள் அமர்ந்திருக்கின்றன. அருகில், செந்நெற்கதிர்கள் காற்றில் அசைந்தாடுகின்றன. சம்பந்தருக்கு, அரசனும் அரசியும்அரியாசனத்தில், பணியாளர் இருபுறமும் கவரிவீச அமர்ந்திருக்கும் காட்சியும், அதை அடுத்தே, சிவகணங்கள் கவரிவீச, கைலை மலையில், மாணிக்கப் பீடத்தில் அம்மையும் அப்பனும் வீற்றிருக்கும் காட்சியும் தோன்றின. அவரது அகத்தில் நிறைந்திருந்த சிவம் புறத்திலும் தோன்றியது. திருவருட் சக்தியாகிய அம்மையை உடன்கொண்டு விளங்கும் சிவத்தைக் கூடிக்கலந்து மகிழ்வது எப்போது என்று ஏக்கம் கொள்கின்றார். அன்னங்களைப் பார்த்து,

''சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்காள்! விண்ணோடு மறைகள்
தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் துளங்காத
கூற்றுதைத்த திருவடியே கூடுமா கூறீரே''[5]

என்று வேண்டுகின்றார்.

அருளியல் அனுபவத்தின் முடிமணியாக விளங்குவது, உயிர் இறைவனோடு ஒன்றிநிற்பது (Unitive way) ஆகும்.

இறைவனை நெருங்கிச் செல்வதற்கு ஏற்படும் தடைகள் யாவும் நீங்க, இறைவன் உயிர் உணர்வில் நிறைந்து நிற்க, இருவரின் அன்பும் இணைய, உயிரானது தன் உணர்வை (நான் உள்ளேன் என்ற உணர்வை) அறவே விடுத்து, இறைவனின் அருள் வியாபகத்தில் ஒன்றி, அதுவேயாகிப் பேரானந்தம் பெறும். இதனைச் சைவநெறி 'ஆன்ம போதம் நீங்கப் பெற்றுச் சிவபோதத்தில் நிற்றல்' எனக் கூறும்.

இப்பேரின்ப நிலை சொல்லைக் கடந்தது. எனினும் அருளியற் கவிஞர் இதனை நாயகனும் நாயகியும் கூடி இன்புறும் காதற் புணர்ச்சியைக் குறியீடாகக் கொண்டு ஓரளவு வெளியிடுவர். திருஞானசம்பந்தர் தமது கவிதை வாழ்வைத் தொடங்கும் போதே அருளியற் கவிஞராகத்தொடங்கியவர். அப்போதே நாயகியாகத் தம்மை உணரும் அளவிற்கு இறையுறவில் நெருக்கம் பெற்றார். அவ்வுறவு முறுகி, முதிர்ந்து, கனிந்தது. அவர் அருளியல் வாழ்வின் படிநிலைளை எல்லாம் பெருமுயற்சி இல்லாமலே கடந்து, சிவத்தின் முழுநிறை அருளுக்கு முழுதும் கொள்கலனாகி. அவனோடு ஒன்றி நிற்கும் உயர்நிலையைப் பெற்றார். அந்நிலையில், தமது ஆன்ம போதம், புளியம்பழம் கனியும் போது கழலும் தோட்டைப்போலத் தானே அவிழ்ந்துநிற்க, சிவத்தோடு ஒன்றி நின்றார்.

இவ்வனுபவத்தை ஒரு பதிகம் பாடுங்கால் நினைவு கூர்ந்து, "மன்னிய ஈசன் சேவடி நாளும் பணிகின்ற தன் இயல்பு இல்லாச் சண்பையர்கோன் சீர்ச்சம்பந்தன்" என்று தம்மைக்குறிப்பிடுகின்றார். இதற்குச் 'சீவபோதம் அற்ற திருஞானசம்பந்தர்' என்று உரை வரைந்துள்ளார் ச. தண்டபாணி தேசிகர். [6]

அருளியலின் இம்முடிநிலை அனுபவத்தைச் சம்பந்தர் நாயகி நிலையிலும் நின்று பாடுகின்றார். சிவத்தோடு ஒன்றிக்கலந்தபின், பிரிந்திருக்கும் காலத்தில், தமது ஆன்மிக அனுபவத்தில் உணரப்பட்ட குறையை எண்ணி வருந்துகின்றார். அக்குறை நேருமாறு இறைவன் செய்தமை,

அவன் கொண்ட அன்பிற்குப் பொருந்துமா என்று அவர் உள்ளம் வேதனைப்பட்டது. இதனை ஒரு பதிகத்தில் பாடு கின்றார். [7]

அதில் பாடல் தோறும் முதற்கண், தான் நாயகனைக் கூடியிருந்த காலத்தில் பெற்ற இன்பத்தையும் பிறகு, பிரிந்த போது உண்டான இழப்பையும் பாடுகின்றார். இப்பதிகம் அவர் அகமும் புறமும் சிவானுபவமே ஆகப்பெற்றார். என் பதை நன்கு எடுத்துக்காட்டுகின்றது. இதில் தன்னைக் காதல் தந்து கலந்தவன் எந்த எந்த உருவத்திருமேனிகளுடன் காட்சி தந்தான் என்று கூறுகின்றார்.

''திருநீறணிந்து விடையேறிவந்த நிமலன்'', ''கையில் செஞ்சுடர் ஏந்திய கடவுள்,'' ''கங்காதரன்'', ''பாம் பணிந்தவன்'', ''சந்திரசேகரன்'', ''பிட்சாடனன்'', ஆகிய திருவுருவங்கள் அவரது காட்சியில் அடுத்தடுத்துத் தோன்றி, முடிவில் 'பரசிவமாக' நிறைவுற்று உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூன்றும் அற்ற சொரூபமாக (தனது நிலை) நின்று, அருள் வழங்க, சம்பந்த நாயகி சிவநாயகனோடு கூடிப்பேரானந்தம் எய்தினார். நாயகியின் உணர்வு நாயகனின் உணர்வோடு ஒன்றிக் கலந்தது. முழுதும் நாயகனின் வயமாய், தற் சுதந்திரம் அற்று, தன்னை மறந்து, பேரானந்தம் உற்றார்.

இவ்வாறு சிவானந்த அனுபூதியைப் பெற்றபின், சம்பந்தர் தாம் உரைக்கும் சொற்கள் எல்லாம் சிவத்தி னுடைய சொல் என்றே உணர்ந்தார். இதனை மிகச் சுருக் கமாக, அழகாக,

''எனது உரை தனது உரையாக''

எனப் பாடல் தோறும் குறிப்பிடுகின்றார். பி. எஸ். சோமசுந்தரம் என்பார். இத்தொடரைக் கொண்டு, சம்பந்தர் தம் கூற்றுக்கள் யாவும் இறைவன் தம்முன் நின்று வெளிப்படுத்துவனவே என்று உணர்ந்திருந்தார். என எழுது கின்றார்.[8] வேதங்களை இறைவனின் வெளிப்பாட்டுரை

(Revelation) என்று கூறுவதுண்டு திருக் குர்-ஆன் அத்தகை யதே என்பர். ஞானசம்பந்தர் பாடல்களில் அத்தன்மை இருப்பது கருதியே சேக்கிழார் அவற்றை, 'எழுது மறை' என்றார்.

இங்குக் குறிப்பிட்ட பதிகத்தில், சிவபெருமானைத் 'திருமாலும் பிரமனும் தேடிக் காண இயலாதவன்' என்று தமது பதிக வழக்கப்படி குறிப்பிட்டாலும், இப்பதிகத்தின் அமைப்பைக் கருதும் பொழுது, உருவத் திருமேனி உடைய வனாக முதற்கண் காட்சி தந்த சிவம், இறுதியில் வடிவம் கடந்த பரம்பொருளாக, நிறை நிலையில், சம்பந்தரின் உள்ளான்ம உணர்வில் புலப்பட்டான் என்று எண்ணத் தோன்றுகிறது. இப்பாடலில், ''உளம் அழை எனது உரை'' எனச் சம்பந்தர் கூறுதலால், அச் சொரூபத்தைக் 'காண் பதற்கே'- (மெய்யுணர்வு அனுபவமாகப் பெறுவதற்கே) அவர் வேட்கை கொண்டிருந்தார். என்றும், அவர் உள்ளம் (ஆன்மா) அழைத்த அழைப்பை - கதறலை- இறைவன் ஏற்றுக் கொண்டான் என்றும் அறியலாம்.

இனி இப்பதிகப் பாடல்களின் பிற்பகுதிக் கருத்தை நோக்குவோம். 'அவ்வாறு கலந்து ஆனந்தம் தந்த நாயகன் இப்போது பிரிந்து, என் மேனியை வாட்டமுறச் செய்தல், அவனது அன்பிற்குத் தகுமா?' என்று வினவுவது.[9] அப்பகுதி யின் கருத்து. பேரானந்தம் தந்த மிக உயர்ந்த இறையனு பவம் மாந்தர்க்கு வாய்த்தாலும், உடம்பு உள்ளவரை, அது நீங்குவதும் மீண்டும் இறைவன் திருவுள்ளக் குறிப்பு இருந் தால் வாய்ப்பதுமாக இருக்கும். இது சீவன்முத்தர் நிலை. அவர்கள் உடம்பை விட்டு விதேக முத்தி (அல்லது பரமுத்தி) அடையும் காலத்தில் சிவத்தோடு கலந்து, என்றும் பிரியா நிலையை எய்துவர்.

அடுத்து ஞானசம்பந்தர் தமது அகமும் புறமும் ஒன்றானமையை இப்பதிகத்தில் புலப்படுத்துகின்றார். இப்

பதிகம் பாடிய தலம் இலம் பையங்கோட்டூர். அங்கு இயற்கைக் காட்சிகளில் எல்லாம், சிவமும் அருட் சக்தியும் பிரியாது விளங்குவதைக் கண்டார்.

''கலையின்ஆர் மடப்பிணை துணையொடும் துயில
கானல்அம் பெடைபுல்கிக் கணமயில் ஆலும்
இலையினார் பைம் பொழில் இலம்பையங் கோட்டூர்''

என்று அதனைப் பாடுகின்றார். அடுத்து, ''குளம்புறக் கலைதுள, மலைகளும் சிலம்ப, கொழுங்கொடி எழுந்து எங்கும் கூவிளம் கொள்ள'' என்று மொழிகின்றார். இக்காட்சி கைலையில் வீற்றிருக்கும் அம்மையப்பனின் காட்சியாகவே அவருக்குத் தோன்றுகின்றது. 'மான்கன்று துள்ளுகிறது, மலைகள் வேத முழக்கத்தை எதிரொலிக்கின்றன. கொடி ஒன்று வில்வ மரத்தில் படர்வது போல உமையம்மை சிவபிரானது இடப்பாகத்தைத் தழுவி அமர்ந்திருக்கின்றாள்' இக்காட்சியைச் சம்பந்தர் அந்த இயற்கைக் காட்சியில் கண்டார் என்று சொல்லத் தோன்றுகிறது.

அவர் இலம்பையங்கோட்டூரில் மட்டுமன்றி, எங்கெங்கே இயற்கையை நோக்கினாலும், தமது அகத்தில் பொங்கிய அருள்நிறைவுடன், அதனால் உண்டாகிய ஞானத்துடன் நோக்கினார். எனவே அவர் இயற்கைக் காட்சிகளை வருணித்தவை எல்லாம், அழகுக்காட்சியில் ஈடுபட்ட அனுபவ வெளிப்பாடு (Expression of aesthie experience) மட்டும் அல்ல மேலைநாட்டுக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்தைப் போல, அவர் இயற்கையில் அருளியல் அனுபவம் - அதாவது உயிர் ஒன்றி இயற்கையோடு கலக்கும் அனுபவம் பெற்றார். சம்பந்தரைப் பொறுத்தவரை, அவர் அகவெளியிலே இறைவனுடன் கலந்து அனுபவித்தார். புறவெளியிலே அதே இறைவனை இயற்கையிலும் கண்டு அனுபவித்தார். அட்டமூர்த்தியாக—ஐம்பூதமாயும் இரண்டு சுடராகவும் ஆன்மாவாகவும்—இறைவன் விளங்குதல் என்ற தத்துவம் அவருக்கு இவ்வாறு அனுபவம் ஆயிற்று.

''பாரும் நீரோடு பல்கதிர் இரவியும்
பனிமதி ஆகாசம்
ஓரும் வாயுவும் ஒண்கனல் வேள்வியில்
தலைவனுமாய் நின்றார்''[10]

என்பது அவர் அட்டமூர்த்தத்தைப் பாடும் பாட்டு. அவரது காட்சியில் ஆறு கூட வழிபாட்டுப் பொருள்களோடு வந்து இறைவன் திருவடியில் வீழ்ந்து வணங்குகின்றது.

''கொத்தார் மலர், குளிர் சந்து, அகில்
ஒளிர் குங்குமம் கொண்டு
முத்தாறு வந்து அடி வீழ்தரும் முது குன்று''[11]

என்று பாடுகின்றார். கருவண்டு ஒன்று சேற்றில் மலர்ந்திருக்கும் செங்கழு நீர்ப் பூவில் படிந்து, அதன் மகரந்தப் பொடி தன் மேனி எங்கும் பொதுள, சிவந்த நிறம் கொண்டு, அப்பூவின் தேனைப் பருகிக் களிப்பேறி, இவ்வாறு உடம்பும் உள்ளமும் வேறுபட்டு இசைமுரல்கின்றது. இது, சம்பந்தருக்கு மேனியில் வெண்ணீறு சண்ணித்து, செம்மேனி அம்மானை வழிபட்டு அவனது அருளமுதைப் பருகி, உள்ளமும் உடம்பும் சிவமயம் ஆகிச் (சிவகரணங்களாகப் பெற்று) செவ்வழிப் பண்ணிசை பாடி அவனைப் பரவி ஏத்தும் அடியாரை அகக்காட்சிப் படுத்துகின்றது.

''சேறாடு செங்கழுநீர்த் தாதாடி
மதுவுண்டு சிவந்த வண்டு
வேறாய உருவாகிச் செவ்வழிநற்
பண்பாடு மிழலையமே''[12]

மங்கையர் நடனமாட, மருங்கே பொய்கையில் மலர்ந்த தாமரை மலரில் தேன் துளிகள் நிறைதலைக் காணும் சம்பந்தர், இறைவனின் சன்னிதியே ஆகிய இப்பரந்த வெளியில், அவனை வழிபடும் வழிபாடாக மங்கையர் நடனமாட, அவர்

களின் அபிநயத்தில் மெய்ப் பாடாக வெளிப்படும் அன்பைக் கண்டு அருகே அடியார்கள் கண்ணீர் சிந்தும் காட்சியை அதில் கண்டு, அக்காட்சியோடு ஒன்றி நிற்கின்றார்.

''மாதிலங்கிய மங்கையர் ஆட, மருங் கெலாம்
போதிலங்கமலம் மதுவார் பொழிற் பூந்தராய்''[13]

ஞானசம்பந்தர் சிவனின் தொடர்பு உடைய மாந்தரையும் சிவமாகக் காண்கின்றார், தில்லை வாழ் அந்தணரைப் பின் வருமாறு அவர் வருணித்தல், அதனைக் காட்டும்.

''நீலத்தார் கரிய மிடற்றார் நல்ல
நெற்றிமேல் உற்ற கண்ணினார் பற்று
சூலத்தார் சுடலைப் பொடி நீறணிவார் சடையார்
சீலத்தார்''[14]

சிவனடியார்க்கும் தில்லை வாழந்தணர்க்கும் சிவவேடம் எல்லாம் பொருந்தினாலும், நீலகண்டமும் நெற்றிக் கண்ணும், சூல பாணியும் வாய்த்தல் இயலாதன்றோ? தில்லை வாழந்தணர் ஒவ்வொருவரையும் அவர் சிவமாகவே கண்டார் என்பது தெளிவு.

இக்காட்சியைச் சேக்கிழார், சம்பந்தருக்குத் தில்லை வாழந்தணர் சிவகண நாதராகத் தோற்றம் அளித்ததாகக் கூறுவார்.[15] கணநாதருள் சாரூப பதவி பெற்றோர் சிவனைப் போன்ற உருவம் உடையவராயிருப்பர் ஆதலின், அவர் அவ்வாறு கூறினார். ஞானசம்பந்தரின் அருளனுபவப் பின்னணியை வைத்து இவ்வாறும் எண்ணிப் பார்க்கிறோம்.

சிவபிரானது சோதி வடிவம் (சோதியே ஆன வடிவம்) சம்பந்தருக்கு அடிக்கடி தோன்றி வந்தது. கனவில் கூட அக்காட்சியைக் கண்டார். நினைவிலும் அக்காட்சி நின்றது.[16] அக்காட்சி அவருக்கு உயிரினுள் நின்று உணர்த்தும் ஞானமாக அமைந்தது.

''வானவன் கருக்குடி மைந்தன் தன் ஒளி
ஆன மெய்ஞ்ஞான சம்பந்தன்''[17]

காணப்படும் பொருளை ஞேயம் என்பர். காண்பவனை ஞாதுரு என்பர். காட்சியை ஞானம் என்பர். இவையே 'திரிபுடி' எனப்படுபவை. இங்குச் சிவபிரானின் ஒளியாகிய மெய்ஞ்ஞானம் என, ஞேயத்தையும் ஞானத்தையும் ஒன்றே யாகக் கூறுதல் காணத்தக்கது. சிவனை ஒளியாக உணர்ந்த தனது அனுபவம் வேறு, சிவம் வேறு ஆகச் சம்பந்தர் உணர வில்லை. அவருக்கு, அந்த நிலையில் சிவமே ஞானம்; ஞானமே சிவம். காண்பவராகிய (ஞாதுரு) சம்பந்தரின் ஆன்ம போதம் கழன்று விட்டது. ஆக, ஞேயம், ஞாதுரு, ஞானம்- மூன்றும் ஒன்றாய் நின்றன. இதையே அத்துவித அனுபவம் என்பர். இதைச் சம்பந்தர் கவிதையாகப் பாடு கின்றார். அதற்கு இசையமைத்துப் பாடுகின்றார். அந்தப் படைப்பு-அனுபவத்திலும் இசை பாடுவதிலும், இறைவன் முறையே பாடு பொருளாகவும் பண்வளமாகவும் தன்னுள் கலந்திருப்பதை உணர்கின்றார்.

''இயல் இசைப் பொருள்கள் ஆகி எனதுள்
நன்றும் எளியான்''[18]

இறைவன் சம்பந்தருக்குத் தமிழ் அனுபவமாக இருந் தான்; கவிதையனுபவமாக நின்றான்; இசை அனுபவமாக இலங்கினான் என்பதையே இவ்வடிகள் காட்டுகின்றன.

இதுவரை எடுத்துக் காட்டியவாறு, சிவன் தனது அகமும் புறமுமாக விளங்குதலைச் சம்பந்தர், சுருக்கமாக, 'இறைவன் தாம் வாழும் வாழ்க்கையாக, செயல் செய்யும் வாய்ப்பாக, அச்செயலாக எல்லாம் விளங்குகின்றான், என்று விளம்புகின்றார்.

''எழிலிசையின் பொருள், வாழும் வாழ்க்கை
வினையின் புணர்ப்பாகி''[19]

சம்பந்தருக்குத் தாம் பாடிய பதிகப் பாடலே அருளியல் அனுபவம் ஆயிற்று என்பதை இங்குக் காட்டியவற்றால் அறியலாம். அதனைப் பின் வரும் பாடலும் காட்டும்.

''பூவினில் வாசல் புனலில் பொற்பு
புதுவிரைச் சாந்தினில் நாற்றத்தோடு
நாவினில் பாடல் நள்ளாறுடைய நம்பெருமான்''[20]

இறைவன் பொருள்களில் 'ஒன்றான' நிலையில் ஒன்றியிருக்கும் நிலையில்-உள்ளான் என்று சைவம் கூறும். இதைச் சம்பந்தர் கவிஞராக நின்று அனுபவித்தலை முன்னும் எடுத்துக்காட்டினோம். அதனை இப்பாடலிலும் காண்கின்றோம். 'நள்ளாறுடையான், அங்கு இலிங்கத் திருமேனியில் மட்டுமன்றிப் பூவில் வாசமாய்ப் பொருந்தி நிற்கின்றான் தண்ணீரில் பொலிவாகத் தவழ்கின்றான்; புதுமணச் சந்தனத்தில் பொங்கி நிற்கும்நறுமணமாய்க் குலவுகின்றான். அவைபோல; என் நாவில் பாடலாய் நடக்கின்றான்' என்று கூறுகின்றார். பாடல் பாடுதல் என்பது அகத்தின் அனுபவம் மட்டுமல்ல; புறத்தில் காணும் காட்சி அப்படியே பாட்டாகி விடுவதும் இல்லை. அஃது அகப்புற அனுபவம் ஞானசம்பந்தருக்கு அகமே அகப்புறமும் ஆயிற்று!

இவ்வாறு ஆகிய காரணத்தால் இறைவனைப் பாடும் போதெல்லாம் அவர் உள்ளம் குளிர்ந்தது.[21] அவ்வாறு பாடிய தமிழை அவர் 'இன்புறு தமிழ்'[22] எனக் கூறுவது சாலப் பொருந்தும்.

இவ்வாறு சிவம் தமக்கு வாழ்க்கையாகவே ஆனமையால் அந்த இறைப்பொருளை-நிறைநிலையை விடாமல் பற்றுக் கொள்ளும் உறுதிப்பாடு கொண்டார் சம்பந்தர். தமக்காகவோ பிறருக்காகவோ எது வேண்டினாலும் இறைவனையே வேண்டுவது என்று கொள்கை கொண்டார். தம் தந்தையார் வேள்வி செய்யப் பொன் வேண்டியபோது, அதனைத் தருமாறு இறைவனையே வேண்டினார். அப்பதிகத்தில் தமது உறுதிப் பாட்டைப் புலப்படுத்தினார்.

''வாழினும் சாவினும் வருந்தினும் போய்
வீழினும் உன கழல் விடுவேனல்லேன்''[23]

சம்பந்தர் அகமும் புறமும் ஒன்றானமைக்கு மற்றொரு சிறந்த சான்று, திருமருகளில் அவர் பாடிய பதிகம் அங்கு அவர் தங்கியிருந்தபொழுது, வணிகன் மகள் ஒருத்தி தன்னை மணக்க விருந்தவன் மடத்தில் இரவில் துயிலும் போது, பாம்பு தீண்டியமையால் இறக்க, அழுது புலம் பினாள். அவ்வொலி கேட்டுச் சம்பந்தர் அங்குச் சென்று, செய்தி அறிந்து, அவன் நஞ்சு தீர்ந்து எழுந்துநிற்கச் செய்தற் பொருட்டு இறைவனிடம் முறையிட்டு அப்பதிகத்தைப் பாடினார்.

அவர் இப்பதிகத்தை நாயகி நிலை அருளியற் கவிதை யாகப் பாடியுள்ளார். பாம்பின் நஞ்சைத் தீர்ப்பதற்கும் இவ்வாறு பாடுதற்கும் என்ன தொடர்பு? சம்பந்தர் தமது அக அனுபவத்தில், ஆன்ம நாயகனுக்காக ஏங்கும் ஏக்கத்தை அவனைப் பிரிந்து துடிக்கும் துயரத்தை ஒப்பவே காதலனைச் சாகக்கொடுத்த அப்பெண்ணின் ஏக்கமும் துயரமும் இருப் பதை உணர்கின்றார். கருனையால் அவளைப்பார்த்து உருகிய உள்ளம், தம் இருவருடைய உணர்வும் ஒரு தன்மை யனவாகவே இருப்பதால், அவள் உள்ளத்தோடு பரிவு பற்றிய ஒருமை (Sympathetic Identification) மட்டுமன்றி, உண்மையாகவே ஒருமை பெற்றமையால், காதல் கொண்ட நாயகிக்காகச் செலிவி தலைவனை வேண்டுவது போலவும், காதலனைச் சாகக் கொடுத்துவிட்டு, அழுது புலம்பி, மீண்டும் அவனைக் காண மாட்டேனா என்று ஏங்கும் மங்கைக்காக அருளாளர் ஒருவர் இறைவனை வேண்டி முறையிடுவது போலவும் பதிகம் பாடுகின்றார்.

சிலப்பதிகாரத்தில், மாதவி கோவலனுக்கு எழுதிய கடிதம், அவன் தன் பெற்றோருக்கு எழுதியது போலவும் அமைந்தமையை இப்பதிகம் நினைவூட்டுகின்றது. இன்னது செய்வது என்று அறியாமல் மயங்கி, நகரை விட்டுப் புறப் பட்டுவிட்ட கோவலன், தன் பெற்றோரிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்று எண்ணிக்கூடப் பார்த்திராத

வேளையில், மாதவி அவனுக்கு அனுப்பிய கடிதம், தன் பெற்றோரிடம் மன்னிப்புக்கேட்க உதவிற்று அன்றோ!

அதுபோலச் சம்பந்தர் தமது அகத்தில் கொண்ட இறையுறவு நாயகியாக நின்று செலுத்திய காதல் - ஓர் அபலைப் பெண்ணுக்காக இறைவனிடம் முறையிடுவதற்கும் உதவுகின்றதே!

காதலன் இறந்து விட்டான் என்று, முட்டி மோதிக் கொண்டு, தன் கைவளை சிதற அழுபவளின் நிலைமையை யும், இறைவனாகிய காதலன் நாயகியின் உள்ளத்தைக் கவர்ந்து செல்ல, விரகத்தால் அவள் உடல் மெலிய, கைவளை கழன்று விழுவதையும், சிலேடையைப் பயன் படுத்தாமலே இப்பதிகத்தின் ஒரு பாடல் சித்திரிக்கின்றது.

''அறையார் கழலும் அழல்வா யரவும்
பிறையார் சடையும் உடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வாய் இவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே''24

பதிகத்தின் மற்றொரு பாடலில் வரும் ''புலரும் தனையும் துயிலாள், புடைபோந்து அலரும் படுமோ அடியாள் இவளே'' என்னும் அடிகளும் இவ்வாறே இருவர்க் கும் மிக்க பொருத்தமாயுள்ளன.

இதுவரை, ஞானசம்பந்தர் தமது அகத்தில் நிகழ்ந்த அனுபவத்திற்கு ஏற்பவே, புறத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை யும் உணர்ந்தார் என்று கண்டோம். இதன் மறுதலையும் அவரிடம் காணப்படுகிறது. அதாவது, புறத்து நடக்கும் நிகழ்ச்சியால் தம் மனத்தில் எழுந்த உணர்வைத் தம் காரணமாகவே உண்டான உணர்வாகக் கருதும் பான்மை அவரிடம் காணப்படுகின்றது அதனால் போலும்.

1) ''பெண்டிர் மக்கள் சுற்றம் என்னும் பேதைப் பெருங் கடலை
விண்டு பண்டே வாழ மாட்டேன்'' 25

2) ''வஞ்சம் உண்டென்று அஞ்சுகின்றேன்
வலிவலம் மேயவனே''[26]

3) ''நின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்றது உள்ளம்
ஆயமாய காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்
மாயமே என்று அஞ்சுகின்றேன்''[27]

என்றும் பாடுகின்றார். இத்தகைய பாடல்கள் அவரது பாடல் தொகுதியில் மிகச்சிலவே. பதிகத்தில் பிறருக்காகச் செய்யும் பிரார்த்தனையையும் தம் பொருட்டாகச் செய்வது போலவே நிகழ்த்துகின்றார்.

இதுவரை கூறியவற்றால் திருஞானசம்பந்தர் அடிப்படையில் ஓர் அருளியற் கவிஞர் என்றும் உணரலாம். ஞானம் முதிர்ந்து வரும்படிநிலையிலும் உயர்நிலை ஆன்மீக அனுபவம் கைவரப் பெற்றபோதும் அதனையும் சிறந்த அருளியற் கவிதையாகவே பாடுகின்றார் என்றும், தமது அருள் வாழ்வில் அகமும் புறமும் ஒன்றாகி விளங்கப்பெற்றார் என்றும் அறிகிறோம்.

## அடிக் குறிப்புகள்

1. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்தர் புராணம்: 26
2. 1 : 1 : 1
3. 1 : 1 : 4
4. 1 : 1 : 3
5. 1 : 60 : 6
6. 1 : 97 : 11 குறிப்புரை. தரும புரப்பதிப்பு, 1958
7. 1 : 76
8. P. S. Somasundaram, Tirujnanasambandar, Philosophy and Religion, Vani Pathippakam, 1986

9. 1 : 76
10. 2 : 102 : 5
11. 1 : 12 : 1
12. 1 : 132 : 7
13. 2 : 1 : 6
14. 3 : 1 : 3
15. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்தர் புராணம் : 170
16. 3 : 21 : 1
17. 3 : 21 : 11
18. 3 : 79 : 1
19. 3 : 107 : 7
20. 1 : 7 : 4
21. 1 : 98 : 1
22. 2 : 78 : 11
23. 3 : 4 : 2
24. 2 : 18 : 3
25. 1 : 50 : 3
26. 1 : 50 : 5
27. 1 : 50 : 7
28. 2 : 98 : 5

# 3

## மொழி வாழ

மதுரையில் நிகழ்ந்த தமிழ்ச் சங்கத்திலும் அதற்கும் முன்னைய சங்கங்களிலும் நற்றமிழ் வளர்ந்தது. தமிழ் நாட்டுக்கு உரிய மரபுகளோடும் தனக்கே உரிய இலக்கிய மரபுகளோடும் நன்கு வளர்ந்தது. இதனை மனங்கொண்டு, பிற்காலத்தில் தமிழ் வளர்த்தோர் தம் இலக்கியப் படைப்பு களைச் சங்கத் தமிழ் எனக் கூறிக் கொண்டனர். ஆண்டாள் தனது திருப்பாவையைச் 'சங்கத் தமிழ் மாலை' என்றார். திருஞானசம்பந்தரும் தம் பதிகங்களைச் 'சங்கமலி செந் தமிழ்கள்'[1] என்பார். அவ்வாறு அவர் கூறுதற்குச் சிறப்புக் காரணங்களும் பல உண்டு.

தமிழ் இலக்கியத்தின் பொருள் மரபு சங்க காலத்தில் அகம், புறம் என்னும் பிரிவில் அமைந்த வாழ்க்கை நெறிப் பட்டதாக இருந்தது. முதற் காப்பிய காலத்தில் அது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் (குறிக் கோள்) நெறிப்பட்டதாக மாறியது. அக்காலப் பகுதியின தாகிய நீதி இலக்கியத்தில், இவற்றுள் முதல் மூன்று உறுதிப் பொருள்களே ஆய்ந்து, தொகுத்தும், வகுத்தும் கூறப் பட்டன. அவை நீதிகளையே கூறும் இலக்கியம் ஆகும். காப்பியங்களோ நீதிகளை உட்கொண்டவையாக அமைந் தன.

காப்பியப் படைப்பிலும் நீதி இலக்கிய ஆக்கத்திலும் சமணர் தொண்டு பெரிது. அவற்றுடன் இலக்கண நூல்களும் அவர்கள் செய்தனர். வீடு என்னும் உறுதிப் பொருள் பற்றிய இலக்கியம் சமயம் சார்ந்த காப்பியமாக வடிவெடுத்தது. மணிமேகலை அவற்றுள் முதலாவதாகும். அது பௌத்த சமயச் சார்புடையது. குண்டலகேசியும் இச் சமயஞ் சார்ந்ததே. அது கிடைத்திலது எனினும், நீலகேசி என்னும் சமண சமயக் காப்பியத்துள் அதன் கதை கூறப்படுவதுடன், நீலகேசிக்கும் குண்டலகேசிக்கும் நிகழ்ந்த சமய வாதமும் இடம் பெற்றுள்ளது. அதிலிருந்து, குண்டலகேசியும் நீலகேசி போல சமய வாதம் நிரம்பிய காப்பியம் எனக் கருதலாம். வளையாபதி சமண சமயத்தது. அதன் சில பாடல்களே கிடைப்பதால், அதன் தன்மை பற்றி மொழிவதற்கில்லை.

சமணர்கள் எலி விருத்தம், கிளி விருத்தம் முதலிய பிரபந்தங்களும் பாடினர். திருஞானசம்பந்தர் அவற்றைக் குறிப்பிடுகின்றார்.[1]அ. சமணரும் பௌத்தரும் துறவு வாழ்வை வற்புறுத்தி, அதற்கு நெறி வகுத்து, அவ்வாழ்வின் பயனாக அடையத் தக்க வீடுபேற்றை வலியுறுத்தியமையால், மக்களின் உள்ளம் பெரும்பாலும் அறம், பொருள் இன்பங்களை விட, வீடுபேறு எய்துதலின் மேலே சென்றது. சமண பௌத்த சமயங்கள் இன்பத்தைச் சங்ககாலம் அதற்கு அளித்த மதிப்பினை (Human Value) அளித்துப் போற்றவில்லை; புறக்கணித்தனர். சமணருள் இல்லறத்தார் சாவகர் என்னும் பெயருடன் வாழ்ந்தாலும், துறவுடையார்க்கே வீடு பேறு என்பது சமண சமயக் கோட்பாடு ஆகும். பெண்டிரும் வீடு பேறு எய்தல் இயலாது என்று அவர்கள் கொண்டனர்.

பௌத்தர் இல்வாழ்வை ஒதுக்கவில்லை எனினும் ஆசையறுத்தலே பிறவி நீக்குதலுக்கு வழி என்று துறவையும் அறம் செய்தலையும் வற்புறுத்தினர்.

தமிழகத்தில் சற்றொப்ப ஐந்து நூற்றாண்டுக் காலம் இவ்விரு சமயமும் பரவியமையால் சங்க கால வாழ்க்கை மரபான அகவாழ்வும், புறவாழ்வும் மக்களிடையே மதிப்பிழந்தன. இல்லறத்தார் பலராக வாழ்ந்தாலும், துறவு பூண்டோருக்கே வீடுபேறு என்னும் கருத்து அவர்களிடையே மிகுதியாகப் பரப்பப் பட்டு, ஏற்றுக் கொள்ளப்படும் நிலைக்கும் வந்தமையால், இல்வாழ்க்கையை வாழ்வாங்கு வாழும் நோக்கம் அவர்களிடையே வலிகுன்றியது.

திருஞானசம்பந்தர் தமது தமிழ் இயக்கத்தால், ''பெண்ணோடு வாழும் இல்வற வாழ்க்கையில் யாதொரு குறைபாடும் இல்லை'' என்று வற்புறுத்திக் கூறியதுடன், கணவனும் மனைவியுமாய் இருந்து இறைவனை வழிபடலாம். இல்லற இன்பத்தை நன்றாக அனுபவிக்கலாம். அதனால் வீடுபேறு கிடைத்தல் தடைப்படாது என்பன முதலிய கருத்துகளை இலக்கியத்தின் மூலம் பரப்பி இல் வாழ்க்கை மரபிற்கு மீண்டும் உயிரும் ஊக்கமும் அளித்தமையால் அவர் பாடிய இலக்கியத்தைச் சங்கத்தமிழ் என அவர் கூறியது பொருத்தமே எனலாம்.

அடுத்து, சங்ககால அகப் பொருள் இலக்கிய மரபுகளைப் பின்பற்றித் திருஞானசம்பந்தர் நாயகி நிலை அருளியற் கவிதை பாடினார். மற்றும் சங்க இலக்கியத்தில் கவிஞர் இயற்கையழகில் பெரிதும் ஈடுபட்டு, அதனைப் பலவாறு வருணித்ததைப் போலத் தமிழகம் முழுவதும் நடந்த சம்பந்தர், ஐந்து நிலங்களின் இயற்கைக் காட்சி எழிலையும் நயம்பட வருணிக்கின்றார். சங்க காலத்தில் நிலப் பகுதிகளை மக்கள் தத்தம் நாடு என அன்பு செய்து, இயற்கையோடு இயைந்து வாழ்ந்ததேபோல், தம் காலத்து மக்களும் தம்முடைய ஊர், துறவை மதிப்பதை விட்டு, தம்முடைய ஊர்க் கோயில் என ஈடுபாடு கொள்ள வேண்டும்; அதனால் அவர்களுக்கு வாழ்க்கை மதிப்புகள் (Human values) தெரியவர வேண்டும் என்று சம்பந்தர் விரும்பினார். அக் கருத்துடன் இயற்கை வருணனை, ஊர் வருணனை, கோயிற் சிறப்பு முதலியவற்றைப் பதிகங்களில் அமைத்துப் பாடினார்.

அடுத்துச் சங்க காலத்தில் இசைத் தமிழைப் (பண்ணும் தாளமும் பாடலுமான தமிழை) பாணரும், கூத்துத் தமிழைப் (நடனம், நாடகம்) பொருநரும் விறலியரும் கூத்தரும் வளர்த்தது போலத் தம் காலத்திலும் வளர்க்க வேண்டும் என்று விரும்பினார். அதற்காகவே பதிகப் பாடல்களை இசைப் பாட்டாகப் பாடினார். பண்ணமைத்தார். தாமே பாடினார். திருநீலகண்ட யாழ்ப்பாணரைக் கொண்டு யாழிசையோடு பாடச் செய்தார். திருத்தொண்டர் கூட்டத்தைக் கூட்டு வழிபாடாகப் பாடச் செய்தார். ஆணும் பெண்ணுமான அன்பர்கள் தம்முடைய பதிகப் பாடல்களைப் பாடி ஆடவேண்டும்; அது ஒரு வழிபாட்டு முறை என்று மக்களுக்கு அறிவுறுத்தினார். அந்த வழிபாட்டுக்குக் கிடைக்கும் பயனையும் எடுத்துரைத்தார். அவர் பதிகங்கள் சங்க காலத்தில் பதிற்றுப் பத்தும் பரிபாடலும் இசையமைத்துப் பாடல் பெற்றதை நினைவூட்டுகின்றன.

அடுத்துப் பத்துப் பத்தாகப் பாடல் தொகுதி, ஒரு சிறு பிரபந்தம் பாடும் முறை சங்க காலத்தில், ஐங்குறு நூற்றிலும் பதிற்றுப் பத்திலும் பிறகு திருக்குறளிலும் மேற்கொண்ட முறையை நினைவூட்டுகின்றது. ஐங்குறு நூற்றில், வேழப் பத்து, கிள்ளைப் பத்து என வருதல் போல திருக்கடைக் காப்புச் செய்யுள் பெரும்பாலானவற்றில் 'சம்பந்தன் பாடல் பத்தும்' என்றே தொகை கொடுத்துக் குறிப்பிடுகின்றார். பத்துப் பாடல் கொண்ட காரணத்தால் சம்பந்தரின் கவிதை பதிகம் எனப் பெயர் பெற்றது என்று கருதுதல் பொருந்தும். இதற்கு வேறு காரணங்களும் கூறலாம்.[2] சம்பந்தரே தமது திருப்பாசுரத்தைப் பதிகம் எனக் குறிப்பிடுகின்றார்.

அவர் தமது இலக்கியத்தின் பாடுபொருளைத் 'திருநெறி' என்றும், அவ்விலக்கியத்தைத் ''திருநெறிய தமிழ்'' என்றும் குறிப்பிடுகின்றார். ''சென்றடையாத திருவுடையானை'' என அவர் கூறும் தொடரில், 'திரு' என்பது வீடுபேற்றைக் குறிக்கின்றது. எனவே, வீடுபேறு

அடையும் நெறியைப் பாடுதற்கு மேற்கொண்டார் என அறியலாம். சைவத்திருமுறை பன்னிரண்டும் இப்பாடு பொருளையே உடையன.

திருஞானசம்பந்தர் புலவர் அவைகளில் இருந்து, இலக்கியம் பாடி அரங்கேற்றிக் கொண்டிருக்கவில்லை, மக்களிடம் சென்று பாடினார், ஆதலின் தமிழ் இலக்கியத்தில் முன் எப்பொழுதும் இல்லாத எளிமையான நடையில் பாடினார். சங்கத் தமிழ் மக்கள்தமிழ் ஆகியது. இலக்கியத்தமிழ் இயக்கத்தமிழ் ஆகியது. அந்த இயக்கத்தால் சம்பந்தர் மக்களிடம் பண்பாட்டு மாற்றத்தைக் கொண்டுவந்து நிலை நிறுத்தினார். அவரது தமிழின் எளிமைக்குச் சில சான்றுகள்:

1) உடல் இலங்கும் உயிர் உள்ளளவும் தொழ
உள்ளத் துயர் போமே'' [3]

2) ஒருத்தர் ஆகிலும் பலர்கள் ஆகிலும்
உரை செய்வார் உயர்ந்தார்களே [4]

3) எத்தவத் தோர்க்கும் இலக்காய் நின்ற
எம்பிரான் [5]

4) திரு வலஞ் சுழி வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும்
வழிபடுமதனாலே [6]

5) கலகல நின்றதிரும் கழலான் காதலிக்கப்படும்
காட்டுப்பள்ளி [7]

6) குரை கழலே கைகள் கூப்பினோமே [8]

7) குற்றம் அறுத்தார் குணத்தின் உள்ளார்
கும்பிடுவார் தமக்கு அன்பு செய்தார் [9]

நடை எளிமைக்காக இலக்கண விதியையும் புறக்கணித்துப் ''பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே'' எனப் பாடுகின்றார். 'இவனல்லனே' என வருதல் வேண்டும்.

திருவேடகத்தில் பூஞ்சோலையில் வீசிய தென்றலைப் ''பொய்கையின் பொழிலுறு தென்றலார்'' 10

என்பார். இங்கு அஃறிணைப் பெயருக்கு 'ஆர்' என்னும் பலர்பால் விகுதி சேர்க்கின்றார்.

அதையடுத்தே, ஒருவனுக்கு உயர்வுக் குறிப்பாகவும், மற்றொருவனுக்கு இகழ்ச்சிக் குறிப்பாகவும் 'ஆர்' விகுதியைப் பயன்படுத்துகின்றார். மார்க்கண்டேயனின் உயிரைப் பிடிப்பதற்கு இயமன் வந்தமையை,

''பாலனார் ஆருயிர் பாங்கினால் உணவரும்
காலனார் உயிர் செகக் காலினால் சாடினான்'' 11

சிவன்பால் அன்பு கொண்டமையால் பாலன் உயர்வு பெற்றான்; சிவலிங்கத்தைப் புறக்கணித்தமையால், தரும தேவனும் தாழ்ந்தான். இதில் எளிமையும் இருக்கிறது; இலக்கிய நயமும் மிளிர்கின்றது.

ஓசை நயத்தால் உள்ளம் கவரும் ஞானசம்பந்தரின் நடை நலத்திற்குச் சில சான்றுகள் காண்போம்.

1) பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன்
மருவு மிடம் 12

2) கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல் முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும்
வெண்காடே13

3) மன்றத்து மண் முழவம் ஓங்கி
மணிகொழித்து வயிரம் உந்தி
குன்றத் தருவி அயலே புனல்ததும்பும்
குறும்பலாவே14

4) செங்கண் வெள்ளேறு ஏறிச் செல்வம் செய்யா வருவார்15

அடுத்து, உருக்காட்சியை எழுப்பவல்ல அழகிய தொடர் களைப் படைப்பதில் சம்பந்தர் வல்லவர் என்பதை அறியச் சில சான்றுகள் காண்போம்.

சிவபிரான் தலையில் அணிந்துள்ள பிறைச் சந்திரனைப் 'பிள்ளைமதி' எனக் கூறுதல் குழந்தையை வானவீதியில் தவழவிடுவது போல இருக்கின்றன. 'கூனமரும் வெண் பிறை' என மற்றோரிடத்தில் கூறுதல், இளமையிலே கூன் விழுந்தமுதுகு உடைய பையனை நம்முன் நிறுத்துகின்றது, அதனையே ''குறை நிரம்பா வெண் மதியம்'' எனப் பிறிதோர் இடத்தில் கூறுதல், வளர்ச்சிக்கு ஏங்கும் பாவை ஒருத்தியை உள்ளத் திரையில் எழுதுகின்றது.

சம்பந்தர் சிவபிரானை, மணிவளர் கண்டர், சங்கொளி வண்ணர், அழலார் வண்ணத்து அடிகள், சரிசங்க வெண் குழையான், மாசிலா மணிமிடறினார், சங்குலாவு திங்கள் சூடி என்பன முதலிய அழகிய தொடர்களால் குறிப்பிட்டு அவனது திருவுருவை நமக்குக் காட்சிப் படுத்துகின்றார். உமையம்மையையும் மலைவளர் காதலி, பந்தணவு மெல் விரலாள், காம்பனதோளி, பண்மொய்த்த இன்மொழி யாள் என்பன முதலிய எழில் கொஞ்சும் தொடர்களால் குறிப்பிடுகின்றார். சிவபிரானுக்கு, 'விடையேறி', 'மதிசூடி', 'பொடிபூசி' என்று புதிய பெயர்கள் சூட்டுகின்றார்.

பைய என்னும் பாண்டி நாட்டுச்சொல்லை அவர் அங்கேதான் அறிந்தார் என்பதில்லை. மதுரைக்குச் செல்லு முன்பே பாடிய திருப்புகலூர்ப் பதிகத்தில்,

''செய்யமேனி வெளிய பொடிப் பூசுவர்
சேரும் அடியார்மேல்
பைய நின்ற வினை பாற்றுவர்''[16]

என்று பாடுகின்றார். வேளாண்மைத் தொழிலைக் 'குடிமைத்தொழில்' எனச் சுட்டுகின்றார். குரங்கினத்தைத் 'திரங்கன் முகவன்' என்று சொல்வது புதுச்சொல்லாட்சி

ஆகும். காரைக்காலம்மையார் சிவபிரானைக் குறிக்கப்பயன் படுத்தும் எம்மான் என்னும் சொல்லுடன் சம்பந்தர் 'அம்மான்' என்பதையும் வழங்குகின்றார். இவையும், பெருமான், பெம்மான் ஆகிய சொற்களும் மகன் என்ற சொல்லைத் தம்பால் உடையவையாய் நின்றுமருவின.

பெருமான் என்ற படர்க்கைப் பெயரைச் சம்பந்தர் விளியேற்கச் செய்யச் சம்பந்தர் கடைப்பிடித்த முறை காணத் தக்கது. முன்னிலை வினைக்குரிய 'இர்' விகுதியைச் சேர்த்துப் 'பெருமானிர்'[17] என்று வழங்கு கின்றார்.

இரக்கம் என்றும் சொல்லைப் பக்தி என்ற பொருளி லும்,[18] வானுலகம் என்பதை வீடுபேறு என்னும் பொருளி லும்[19], தெளிவு என்ற சொல்லை ஞானம் என்னும் பொருளி லும்[20] பயன்படுத்துகின்றார். இவைபோன்ற பழைய சொற்கள் பலவற்றைப் புதுப் பொருளில் ஆள்கின்றார்.

நடையழகு போலத் தொடையழகும் அவர் பாடல் களில் உண்டு.

1) ''போழுமதி தாழுநதி பொங்கரவு தங்குபுரி புன்சடை யினான்.

2) யாழின் மொழி மாழை விழி ஏழையிள
மாதினொடிருந்த பதிதான்

என்றும் அடிகளில் வழியெதுகை மட்டுமன்றி இரண்டா வது சான்றில் பாடல் முழுதும் ழகரவோசை வரத் தொடுத்த வண்ணம் ஒன்றும் அமைந்துள்ளது.

''நாலூர் மயானத்து நம்பான்றன் அடிநினைத்து
மாலூரும் சிந்தையர் பால் வந்தூரா மறுபிறப்பே''[21]

என்பவற்றுள் இறுதியடியில் முரண்தொடை உள்ளது.

''குட்டத்துக் குழிக்கரையும் குளிர் பொய்கைத் தடத்த கத்தும்
இட்டத்தால் இரைதேரும் இருஞ்சிறகின் மடநாராய்''[2]

என்ற அடிகளில் முதல் மூன்று சீர்களிலும் மோனை அமைந்துள்ளது.

''தாராவே மட நாராய் தமியேற்கொன்றுரையீரே''[23]

என்பதில் நெடுஞ்சீர் வண்ணம் உள்ளது.

அடுத்துச் சம்பந்தர் பாடல்களில் உள்ள உவமை நலங்களுள் சிலவற்றைக் காண்போம். தென்னை மரத்தில் விரியாமல் இருக்கும் பாளை யானையின் கொம்பைப் போன்று இருக்கிறது. என்ற உவமை சங்க இலக்கியத்தை நினைவுகூரச் செய்கின்றது.

''நலமார் வெள்ளை நாளிகேரம் விரியா நறும்பாளை
சலமார் கரியின் மருப்புக் காட்டும் சண்பை நகராரே''[24]

கடல் அலைகள் மலர்களை ஏந்தி, வரிசை வரிசையாக வருவதுபோல் முத்துக்களை அடித்துக் கொண்டு வருகின்றன. சம்பந்தரின் அருள் உணர்வுடன் கூடிய காட்சிக்கு இது, அடியார்கள் வரிசை வரிசையாக, கோயில் வழிபாட்டுக்கு மலர்களைக் கையில் ஏந்தி வருவது போலவும் இருக்கின்றது.

''நித்திலத் தொகை பல நிரைதரு மலரென
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்''[25]

சீகாழியைப் பாடும் சம்பந்தர், அது கடற்கரையை அடுத்த மருதநிலப் பகுதி ஆதலின், திணை மயக்கமாக இயற்கையை வருணிக்கின்றார். அதன் கண் வரும் ஓர் உவமை. செந்நெற் கதிர் வளர்ந்து முற்றிய வயல்களில் பசுமை நிறம் மாறி, எங்கும் தாள், கதிர்கள் எல்லாம் வெண்மையாகத் தோன்றுகின்றன. வயல்களுக்கு இடையே வரப்புகளில் புன்னை மரங்கள் செந்நிறப் பூக்கள் மலரப் பெற்று விளங்குகின்றன. அக்காட்சி, வெள்ளை வெளேல் என விரித்திருக்கும் மிகப்பெரிய ஆடையின் மீது ஆங்காங்கே பவளங்களைக் கொட்டிவைத்தது போல இருக்கிறது.

''செந்நெ லங்கழனிப் பழனத்தயலே செழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்''[26]

வெண்கிழியிற் பவளம் என்பதால், வெள்ளைத் திரைச் சீலையில் ஓவியன் தீட்டிய பவளக்குவியல் என்றும் கொள்ளலாம்.

உவமையைக் கருவாகக் கொண்டு, ஓர் அழகிய இயற்கை நிகழ்ச்சியையே நம் முன் படைக்கின்றார் சம்பந்தர். அதுவும் திணை மயக்கமே முல்லை, மருதம், நெய்தல்என்னும் மூன்று நிலங்களும் அருகருகே இருக்கின்றன. திருவெண்காட்டில் முல்லைக் காட்டின் எல்லையிலே தாழைக்காடு பொய்கை யின் கரையிலே ஒரு தாழை மலர்ந்துதிருக்கிறது. வளைவான தாழம் பூவின் நிழலைத் தண்ணீரில் பார்த்த கெண்டைமீன், மீன் பிடித்து உண்ணும் குருகு என்று எண்ணித் தாமரை மலருக்கு அடியில் மறைந்து கொண்டது. நாள் தோறும் குவிந்து மலரும் தாமரையை அது அறியும் ஆனால் பருவத் தில் மலரும் தாழம்பூவைக் கண்டவுடன் மருண்டது கடற் கரையில் கிடந்த வெண் முத்துக்கள் இதைப் பார்த்துச் சிரிப்பதுபோல் இருந்தன.

''விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின்
கண்புறவில்
மடல்விண்ட முடத்தாழை மலர் நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக் கெண்டை தாமரையின் பூமறைய
கடல் விண்ட கதிர் முத்தம் நகை காட்டும்
காட்சியதே''[27]

முத்துக்கள் நகைத்ததாக இப்பாடலிற் கூறும் சம்பந்தர் மற்றொரு பாடலில் நாம் நகை கொள்ளும் வண்ணம் ஒரு காட்சியைக் காட்டுகின்றார். அதில் அவர் அமைக்கும் ஒரு சொல்லே நகைப்பை விளைக்கிறது. சிவபிரானின் சடை மீது கொன்றை மாலை திகழ்கின்றது அதில் வண்டுகள் இரைக்கின்றன. அங்கே கொடிய பாம்பும் நெளிகின்றது,

சடைமீது அணிந்துள்ள பிறைச் சந்திரன் அதைக் கண்டு இரைக்கின்றான். பயத்தால் நெஞ்சு துடிக்க, ஓடி இளைத்த தவன் போலக் குறு மூச்சாக விடுகின்றான். முதலில் கூறிய 'இரைக்கும்' என்ற சொல்லுக்கும் அடுத்துக் கூறும் அச் சொல்லுக்கும் எவ்வளவு வேறுபாடு! சந்திரனின் அச்சம் நமக்கு நகைப்பை உண்டாக்குகின்றது.

''வண்டிரைக்கும் மலர்க் கொன்றை விரிசடைமேல்
வரியரவம்
கண்டிரைக்கும் பிறைச் சென்னிக் காபாலி''[28]

தமிழகம் எங்கும் நடந்து தமிழ் வளர்த்த சம்பந்தர் தமிழ்ப் புரவலர்கள் எந்தெந்த ஊர்களில் இருந்தனர் என்று அறிந்து வைத்திருந்தார். வேதப் பயிற்சிக்குச் சிறந்த வேதிகுடி என்னும் ஊரில், வேதங்களை ஒத்த தமிழின் சிறப்பையும் அறிந்து, பாவலர்களின் ஓசை நயம், சொல் நயம், பொருள் நலம் ஆகியவை மிக்க இலக்கியங்களை ஆண்டெல்லாம் கேட்டு, அவர்களைப் பேணிய புரவலர் களும் இருந்தனர் என்று வேதிகுடிப் பதிகத்தில் மறவாமல் பாடுகின்றார்.[29]

அவர் பதிக இலக்கியம் பாடித் தமிழுக்கு அளித்த கொடை மிகப் பெரிது. சங்க காலத்தில் இருந்த இசைப் பாடல்கள் நமக்குக் கிடைக்க வில்லை. இளங்கோவடிகள் சில இசைப் பாடல்களை யாத்துள்ளார். அதை அடுத்துச் சம்பந்தரே மிக்க பெரிய எண்ணிக்கையில் இசைத்தமிழுக் குப் பாடல்கள் இயற்றி வளம் சேர்த்தவர். இருபத்திரண்டு பண்களுக்கு உரிய யாப்பில் அவர் பாடியவையாக 383 பதி கங்கள் கிடைத்துள்ளன. எத்துணையோ பதிகங்கள் கிடைக்காமற் போயின என்று திருமுறை கண்ட புராணம் கூறும். இப்போது கிடைக்கும் பதிகங்களுள் அரிய, புதிய யாப்பு வடிவங்களாக அவர் பாடியவை, மொழி மாற்று, மாலை மாற்று, யமகம், ஏகபாதம், இருக்குக் குறள், திரு

வெழு கூற்றிருக்கை, ஈரடி, ஈரடிவைப்பு, நாலடி மேல் வைப்பு, சக்கரமாற்று, திருமுக்கால் என்பவை ஆகும். அவ்யாப்புகளில் அதுகாறும் யாரும் பாடல் செய்ததில்லை. ஆதலால் போலும் சேக்கிழார் அவற்றை மூல இலக்கியம் என்பார்.[30] பதினோராந் திருமுறையில் திருவெழு கூற் றிருக்கை பாடிய நக்கீரதேவர் சம்பந்தருக்குப் பிற்பட்டவர்.[31]

இசைத்தமிழில் இன்ன பண் என்று அறிய வியலாமலும் யாழிலிட்டு வாசிக்க இயலாமலும் உள்ள யாழ்மூரி என்னும் யாப்பை (பண்ணை) சம்பந்தர் பாடியமையும் அரிய சாத னையே திருத்தாளச்சதி என்னும் ஒரு யாப்பு வகையும் அவர் பதிகங்களுள் உள்ளது.

இசைப் பாடலே பாடினாலும், பொருள் நலத்தில், ஞானச்செல்வத்தில், மந்திர ஆற்றலில் வேதாகமங்களையும் உபநிடதங்களையும் ஒத்த தமிழ்மறையேயாக விளங்கும் பாடல்களாகப் பாடித் திருஞானசம்பந்தர் தமிழ் வளர்த் தார். வைதிகரும் சமணரும் பௌத்தரும் வளர்த்த வட மொழியின் வேகமான வளர்ச்சிக்கு ஈடுகொடுத்துத் தமிழை நிலைநிற்கச் செய்தார். அவ்வாறு தமிழ் நிலைநிற்க வேண்டும் என்பதே அவர் உள்ளக்கிடக்கை என்பதைக் குறிப் பாக, மிக அழகாகக் கூறுகின்றார். 'வேதங்களை ஓதும் இடமாகிய திருமருகலில் உறையும் இறைவா, நீ செந்தமிழ்ப் பாடல்களால் அன்பர்கள் பரவி ஏத்தும் செங்காட்டங்குடிக் கணபதீச்சரத்தை விரும்புவது ஏன் என்று சொல்வாயாக என வேண்டும் பாடல் அது.

''மந்திர வேதங்கள் ஓதும் நாவர்
மருகல் நிலாவிய மைந்த சொல்லாய்
செந்தமிழோர்கள் பரவி ஏத்தும்
சீர்கொள் செங்காட்டங்குடியதனுள்
கந்தம் அகிற்புகை யேகமழும்
கணபதி யீச்சரம் காமுறவே,''[32]

திருஞானசம்பந்தரின் இவ்வுளக்கிடக்கை கருதியும் அவர் செய்த அளப்பரிய இலக்கியத் தொண்டைக் கருதியும், அதனையும் இசையாலும் இயக்கப் பணியாலும் வளர்த்த தைக் கருதியுமே சுந்தரர், ''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்'' என்று போற்றுகின்றார்.[33]

## அடிக் குறிப்புகள்

1 . 74 : 11
1அ. 3:39 : 5 அதன் குறிப்புரை. தருமபுர ஆதீனம், 1955

2. P. S. Somasundaram, Tirujnanasambandar, Page 11

3. 1 : 3 : 8
4. 3 : 38 : 11
5. 1 : 4 : 10
6. 2 : 106 : 1
7. 1 : 5 : 5
8. 1 : 5 : 8
9. 1 : 8 : 6
10. 3 : 32 : 6
11. 3 : 28 : 6
12. 2 : 43 : 8
13. 2 : 48 : 8
14. 2 : 71 : 7
15. 2 : 80 : 2
16. 1 : 2 : 5
17. 2 : 1 : 2
18. 2 : 9 : 8
19. 2 : 10 : 8
20. 1 : 3 : 5
21. 2 : 46 : 1

22. 3 : 63 : 3
23. 3 : 63 : 8
24. 1 : 66 : 5
25. 3 : 31 : 5
26. 2 : 1 : 1
27. 2 : 48 : 4
28. 3 : 66 : 1
29. 3 : 78 : 9
30. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்தர் புரா- 277
31. வெ. சு. அழகப்பன் பதினோராம் திருமுறைத்திறன், கண்ணம்மை பதிப்பகம், காரைக்குடி 1987. பக் 22
32. 1 : 6 : 9
33. சுந்தரர்தேவாரம், 62 : 8

4

## மரபு வாழ

திருஞானசம்பந்தர் தம் பதிகங்களில் அமைத்த பாடு பொருள் திருநெறி என்பதை முன் இயலில் எடுத்துக்காட்டினோம். மாந்தர் அடையும் குறிக்கோள் வீடுபேறு என்பதை நோக்க, அவர் தமது இயக்கத்தால் எடுத்துக்கூறிய நெறி திருநெறி என்பது பொருந்தும். அக்குறிக்கோளை அடைவதற்கென மேற்கொள்ளத்தக்க வாழ்க்கைநெறியாக அவர் வலியுறுத்திக் கூறுவது திருத்தொண்டு நெறியாகும்.

திருத்தொன்டு நெறி என்பது இறைவன் திருவுள்ளப்படி வாழும் நெறியாகும் (To live in ture with god's will) இது எளிதாக இயல்வதன்று, திருக்கோயில் தொண்டும், திருகோயில் வழிபாடும் செய்தால், இறைவனிடம் அன்பு பெருகி நிற்கப் பெறும் நிலை வரும். அதற்கு அவ்விரண்டினாலும் அவனது அருளைப் பெறுவதே காரணம். அவன் அருளே அவனுக்கான அன்பை உண்டாக்கும் ''அவனருளாலே அவன் தாள் வணங்கி'' என்பது திருவாசகம். அவனது அருளும் வழிபடுவோரின் அன்பும் பெருகும்பொழுது, தன் முனைப்பை விட்டு, இறைவன் திருவுள்ளம் அறிந்து, அதன்வழி வாழ்கின்ற மனப்பான்மை உண்டாகும். ஆகவே ஞானசம்பந்தர்

தமது இயக்கத்தில் திருக்கோயில் வழிபாட்டை வற்புறுத்தினார். திருத்தொண்டு நெறியில் வாழ்வதற்கு அடிப்படையும் மையமும் திருக்கோயிலே ஆகும். ஆகவேதான் சைவ சமயம் திருக்கோயிலை உயிர் நாடியாகக்கொண்டது.

''திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீ றணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாய்ப் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட்டு உண்ணா ஊரும்
அவை எல்லாம் ஊரல்ல அடவி காடே'' [1]

என்றார் திருநாவுக்கரசர். உலகைப் படைத்தவன் ஒருவன் இல்லை என்ற கோட்பாட்டைப் பரப்பிய சமணர்களின் சமயம் செல்வாக்குடன் விளங்கியமையால், தமிழகத்தில் முற்காலத்திலிருந்தே விளங்கி வந்திருந்த திருக்கோயில்களில் வழிபடுவோரின் தொகை குறைந்தது. வழிபாடும் சரிவர நடைபெறவில்லை. அந்தச் சூழ்நிலையில் சமணர்களின் எதிர்ப்பிற்கு எதிர்ப்பாகக் கோயில் வழிபாட்டை ஓர் இயக்கமாகப் பரப்பினார் திருஞானசம்பந்தர். திருக்கோயில் வழிபாடு என்ற மரபு வாழ அவ்வியக்கத்தை நடத்தினார்.

இந்த மரபு தமிழகத்தில் என்று தோன்றியது? தொல்காப்பியர் காலத்தில் கோயில் என்ற சொல்லாட்சியே இல்லை. நடுகல் வணக்கம் பற்றிக் கூறும்பொழுது, அக்கல்லினைச் சூழ அமைக்கப்படும் 'பெரும் படை' என்னும் கட்டிடத்தைத் தொல்காப்பியர் குறிக்கின்றார். நால்வகை நிலத்திற்கும் உரிய தெய்வங்களைக் குறிப்பிடும் அவர், அவற்றுக்குக் கோயில் இருந்தாகக் கூறவில்லை. எனினும் நடுகல் என்ற சிறு தெய்வத்தை வணங்குவதற்குக் கட்டிடம்

அமைக்கும் மக்கள் நிலத்தெய்வங்களுக்குக் கட்டிடம் அமையாது இரார் எனக் கருதலாம்.

தொல்காப்பியர் கற்பியலில், தலைமகனின் பிரிவிற்குரிய காரணங்களுள் ஒன்றாகக் ''காவற் பாங்கின் ஆங்கோர் பக்கமும்'' என்பதைக் குறிப்பிடுகின்றார். இது கடவுள் வழிபாட்டிற்குப் பிரியும் பிரிவு என உரை வரைகின்றார் இளம்பூரணர். எனவே கடவுளர் உரையும் தலங்கள் இருந்தன என்றும், அவற்றுக்கு மக்கள் யாத்திரை மேற்கொண்டனர் என்றும் ஊகிக்கலாம்.

கடவுளை வாழ்த்திப் பாடல் செய்வது உண்டு என்று தொல்காப்பியர் கூறுவார். அவை கொடி நிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்னும் ஆறு பாடாண்டிணைத் துறைகளில் அமையும் என்பார். கடவுளை வாழ்த்தியமையும் இவ்வியற்றமிழ்ச் செய்யுள் போல இசைத் தமிழிலும் பாடல்கள் இருந்தன என்றும், அவை 'தேவ பாணி' என வழங்கின என்றும், உரையாசிரியரின்எழுத்தால் அறிகின்றோம். இசைத்தமிழ்ப் பாடல்களுள் சில வகையாகப் பெருந்தேவபாணி, சிறு தேவபாணி என்பனவற்றைச் சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரை குறிப்பிடும்.

தொல்காப்பியர் கூறும் ஆறு துறைகளுள், பரவல் என்பது இறைவனை முன்னிலைப்படுத்தி ஏத்துதல் ஆகும். ஒத்தாழிசைக் கலிப்பா யாப்பில் இப்பொருளே பாடுதற்கு உரியது என்றும் தொல்காப்பியர் கூறுவார். எனவே இறைவனைப் பரவுவதற்கென ஒரு யாப்பு வகையைப் பழந்தமிழர் சிறப்பாகக் கொண்டிருந்தனர் என்று அறியலாம்.

சங்க காலத்தில் கோயில் என்ற சொல் பெரும்பாலும் அரண்மனையைக் குறித்ததாயினும் சில இடங்களில் தெய்வம் உறையும் இடத்தையும் குறித்தது. ''வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்'' என்பது புறநானூற்றில் வரும் அடி.[1] அ. சங்க இலக்கியத்தில் முருகன் கோயிலைக் குறிக்

கும் இடத்தில் 'நகர்' என்னும் சொல் ஆளப்படுகின்றது. அங்கு வழிபாடாகப் புகை காட்டப் பெற்றுக் குறிஞ்சிப் பண்ணில் பாடிய செய்தியும் சொல்லப்படுகின்றது.[2]

பாடினி பாலையாழை மீட்டிக் கடவுளை வாழ்த்திப் பாட, பொருநன் தடாறி என்ற தாள வாத்திதியத்தை வாசித்தமையைப் பொருநராற்றுப் படை கூறும். திருப்பரங் குன்றத்தில் முருகப் பெருமானை வாழ்த்திப் பாடிக் கொண்டே ஆடிய சூரர மகளிரைத் திருமுருகாற்றுப் படை காட்டும். வள்ளிக் கூத்து முதற்கண் முருகனைப் பரவி ஆடிய நடனம் என்றும், பிறகு பிற தெய்வங்கட்கு உரிய முறை யிலும் ஆடப் பெற்றது என்றும் அறிகிறோம்.

கோயில் இன்றிக் கடம்ப மரத்தின் நிழலில் எழுந்தருளி யிருந்த முருகனை வழிபடும் முறையில், சேரி தோறும் குரவைக் கூத்து நடந்தமையை மதுரைக் காஞ்சி கூறும்.[3] கலித்தொகைக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்தைக் 'கடவுட் பாட்டு' என்பார் இளம் பூரணர். அப்பாட்டுள் சிவபிரானை முன்னிலைப் படுத்திப் பரவல் என்னும் துறை அமைந்துள்ளது. அதில், ''இறைவா, நீ எல்லா உலகங்களையும் அழித்துத் தாண்டவமாகக் கொடு கொட்டி, பாண்டரங்கம் என்னும் கூத்துக்களை ஆடும் போது, உமையம்மை தாளமிடுவாளோ?'' என்று வினவுகின்றார் புலவர்.

இதுகாறும் கூறியவற்றால் கடவுள் உறையும் தலங் களுக்குச் சென்று வழிபடுதலும், கடவுளைப் பரவிப் பாடியும் ஆடியும் வழிபடுதலும் தொல்காப்பியர் கால முதலே இருந்து வந்த மரபு என்று அறியலாம். திருஞானசம்பந்தர் இந்த மரபை மீண்டும் நிலை நாட்டவே இயக்கம் நடத்தி னார். மக்களிடம் அவரவர் ஊர்களின் அருகே அமைந்த தலங்களின் பெருமையை எடுத்துக் கூறி, கோயில்களுக்கு அழைத்துச் சென்று, பதிகப் பாடலால் இறைவனைப் பாடிப் பரவுவதற்கு வழிகாட்டி, வழிபட வைத்தார்.

திருமறைக் காட்டில் வேதங்கள் அடைத்த கதவை அவரும் திருநாவுக்கரசரும் மீண்டும் திறந்து அடைத்து முறையான வழிபாடு நடைபெறுவதற்காகப் பதிகம் பாடினர் என்பதனால், தமிழ்நாட்டில் அடைத்துக் கிடந்த திருக்கோயில்களை மீண்டும் திறந்து வழிபாடு நடக்கச் செய்தனர் என்று உணரலாம். மற்றும் சில கோயில்களில் பழங்கால முதலே வழிபடும் உரிமை பெற்ற மக்கள் சிலர் மட்டும் வணங்கி வந்தனர் என்று சம்பந்தர் குறிப்பிடுகின்றார்.[4] மதுரைப் பதிகம் ஒன்றில், அத்தலத்துக் கோயிலில் அரசி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் மட்டுமே பணி செய்து வழிபட்டனர் என்று கூறுகின்றார்.

ஆடல் பாடல் வழிபாடு என்ற மரபை மறுமலர்ச்சி பெறச் செய்தற்கும், கோயில் வழிபாட்டினை வற்புறுத்துதற்கும், அவ்வழி பாட்டிற் பாடுதற்கும், மக்கள் இறைவனின் பெருமையை அறிந்து கொள்ளுதற்கும், சமயத்தை ஒரு கூறுபாடாக உடைய வாழ்க்கை நெறியை அறிந்து கொள்ளுதற்கும், அவர்களது அறிவுக் கண்ணைத் திறப்பனவாகவும், அதே சமயம் அவர்களது பக்தியுணர்விற்கும் கலையுணர்விற்கும் வடிகாலாகவும் அமையும் பதிகங்களைத் தலந்தோறும் பாடி, ஆங்காங்குள்ள மக்களுக்கு அளித்தார். அதனை மக்களின் உடைமையாக்கினார். ஒரே சமயத்தில் சமயத் தொண்டும் சமுதாயத் தொண்டும் தமிழ்த் தொண்டும் செய்தார்

பூவும் நீரும் சொரிந்து இறைவனை வழிபடுதல் பழங்காலத்தில் பொது வழிபாடாகவும் பாடல், ஆடல் சிறப்பு வழிபாடாகவும் இருந்தன. பூவும் நீரும் சொரிதல் சிவாகமங்களில் முறையே அர்ச்சனை என்றும் அபிடேகம் என்றும் விரிவான கிரியை முறை ஆக்கிச் சொல்லப்பட்டமையால், சம்பந்தர் அவற்றையும் பல பதிகங்களில் குறிப்பிடுகின்றார். பாடல் ஆடல் வழிபாட்டிற்குத் தாமே பதிகப் பாடல் இயற்றிக் கொடுத்தார். அதனால் தமிழ் இசை மரபையும்

வளர்த்தார். எனவே நம்பியாண்டார் நம்பி அவரைப் 'பதிகப் பெரு வழி' காட்டியவர் எனப் போற்றினார்.

இசையோடு பாடுதலும் அதற்கு ஏற்ப ஆடுதலும் அன்பின் மெய்ப்பாடுகள் ஆதலின், அவை பக்தி நெறியுள் அடங்கும். அன்பே வடிவான ஈசன் பக்தரின் அன்பிற்கு வயப்படாதிருப்பானோ? ஆதலால் ஆடல் பாடல் நெறிக்குப் பயனாக அவனே கிடைப்பான் என்று கூறுகின்றார் சம்பந்தர்.

''பாடல் நெறி நின்றான் பைங்கொன்றைத் தண்டாரே
சூடல் நெறி நின்றான் சூலஞ்சேர் கையினான்
ஆடல் நெறி நின்றான் ஆமாத்தூர் அம்மான்''

என்று கூறும் சம்பந்தர், இவ்விரண்டு நெறியும் சிவபிரானுக்கு அன்புடைய தொண்டர் மேற்கொள்ளும் நெறி என்ற கருத்தால், இவற்றுக்கு ஒரு பொதுப் பெயராக 'வேட நெறி' என்பதை இப்பாடலில் கூறியுள்ளார். எனவே பாடல் நெறியும் ஆடல் நெறியும் ஆகிய பதிகப் பெருவழி, திருத்தொண்டு நெறிக்குள் அடங்கும் என்று அறியலாம். ''நேயம் மலிந்தவர் வேடமும்'' எனப், பிற்காலத்தே மெய் கண்டாரும் திருத்தொண்டரைக் குறிப்பிட்டார்.

திருவையாற்றுக் கோயிலில், ஆடல் பாடல் நெறியில் மகளிர் வழிபாடு செய்வதைச் சம்பந்தர் குறிப்பிடுகின்றார்.[6] அப்பாடலை இறைவன் கேட்டு உவக்கின்றான் என்று கூறுகின்றார்.[7] ஆலூர் என்னும் தலத்தில் பாடல் வழிபாடு என்றும் நின்று போனதில்லை என்கின்றார்.[8] அவ்வாறு அங்கு இன்னிசை பாடுவோரிடம் இறைவன் நிலைபெற்று இருக்கின்றான் என்றும் கூறுகின்றார்.[9] இயல், இசை, கூத்து என்னும் முத்தமிழாலும் ஏத்துபவரின் சிந்தையில் இறைவன் குடிபுகுவான் என்கின்றார்.

''இசை வர விட்டு இயல் கேட்பித்துக் கல்ல வடமிட்டுத்
திசை தொழுது ஆடியும் பாடுவார் சிந்தையுட்
சேர்வரே''[10]

இதன் கருத்து, இசையிடுதலால் மன ஒருமை கைவரப் பெற்று இறைவனை இடையறாது தியானிக்கும் பேற்றையும் பெறுவர் என்பதாகும். இக்காலத்தார் இதனை 'நாத யோகம்' என்பர். சம்பந்தர் இன்னும் ஒரு படி மேலே சென்று, இசைப்பாட்டுக்களை நிரம்பப் பாடியே, இறைவ னோடு உணர்வு கலந்து சிவானந்தம் பெற்றோர் கற்குடி மலையில் உண்டு என்று பாடுகின்றார். இது ஒரு வரலாற்றுச் சான்றாக அமைகின்றது.

''நலந்தரு சிந்தையராகி நலமலி மாலையினாலே
கலந்தவர் காதலில் வாழ்வும் கற்குடிமா மலையாரே''[11]

அத்தொண்டர்களின் அன்பில் மயங்கியே இறைவன் கற்குடியில் உறைகின்றானாம். தியானம் கைவந்ததை மேற் பாட்டில் கூறியவர், இப்பாடலில் சமாதி கூடியதைக் கூறு கின்றார். அன்புநெறியால் அட்டாங்கயோகத்தின் அரும் பயனாகிய சமாதிநிலை, முற்படிகளாகிய ஆசனம், பிராணா யாமம், பிரத்தியாகாரம் முதலியவை இல்லாமலே, எய்து தலைச் சம்பந்தர் இங்கு எடுத்துக்கூறுகின்றார்.

சைவ சமயம் சிவயோகம் எனக் கூறுவது அட்டாங்க யோகம் அன்று. முதிர்ந்த அன்பினால், மனம் இறைவனிடம் ஒரு முகப்பட்டு குவிந்துநின்று-சிவோஹம் பாவனை செய்வது அவனோடு ஒன்றி நிற்பதே சிவயோகம்.

பாடல் வழிபாட்டால் சிவானுபவம் கிடைப்பதைக் கூறிய சம்பந்தர், வேறு பாடல்களில், அவ்வழிபாட்டால் மலங்கள் நீங்கும் எனக் கூறுகின்றார்.[12] இசைக்கு மயங் காதார் யாரே? சிவபெருமான் இசைகேட்டு மகிழ்வது மட்டு மன்றி, தானே வேதத்தையும் தமிழ்ப் பாடலையும், வீணை மீட்டிப் பாடுகின்றான் என்பார் சம்பந்தர்.

1. அங்கமொர் ஆறுடை வேள்வியான
அருமறை நான்கும்
பங்கமில் பாடலோடு ஆடல் பாணி
பயின்ற படிறர்[13]

2. வேதமோடு தமிழிசை பாடுவர்[14]

3. இன்குரல் இசைகெழும் யாழ் முரலத்
தன் கரம் மருவிய சதுரன்[15]

4. விடமுண்ட கண்டன் மிக நல்ல வீணை தடவி[16]

சிவபிரான் எவ்வாறு வேத, வேதாங்கங்களில் ஈடுபாடு கொண்டவனோ, அவ்வாறே ஆடற் கலையிலும் ஈடுபாடு உடையவன் என்று கூறுகின்றார் சம்பந்தர்.[17] இறைவன் ஆடும் ஊழிக்கூடத்தை வருணிக்கின்றார். இரவில், சுடுகாட்டில், உமையவள் காண, சூலம் எந்தி, குழலும் யாழும் மொந்தையும் வாசிக்கும் இசைப் பின்னணியில் தாண்டவம் ஆடுகின்றான் என்று கூறுகின்றார்.[18]

சம்பந்தர் அன்பர்கள் வழிபடும்போதும் ஆடுவதற்கும் அபிநயம் பிடிப்பதற்கும் ஏற்ப, பதிகப் பாடல்களைத் தாளத்தோடு அமைத்ததுடன், இறைவனின் திருவுருவ வருணனை, வீரச் செயல்கள், அவனது பரம்பொருள் தன்மையை நிலைநாட்டும் புராணக் கதைகள் ஆகியவற்றை அமைத்துப் பாடினார்.

தமிழ் மக்களின் இல்வாழ்க்கை மரபுகளைக் காப்பதற்காக, சிவபிரான் உமாதேவியோடு வீற்றிருப்பதையும், அம்மைக்குத் தன் உடம்பிலேயே ஒரு பாகத்தைக் கொடுத்ததையும் அடிக்கடி கூறுகின்றார்.

கோயில் வழிபாட்டு மரபில், தலத்தின் பெயரோடு, கோயிலுக்கு அமைந்த பெயரும் சிறப்புக்குரியதாகும். அது உள்ள இடங்களில், கோயிற் பெயரையும் தலப் பெயரோடு சேர்த்தே குறிப்பிடுகின்றார். சான்றாக, மதுரையில் உள்ள கோயிலின் பெயர் திருவாலவாய், 'கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தவாறே' என்பது சம்பந்தரின் குறிப்பு, இவ்வாறே, ''பொழில்சூழ் புளமங்கை, அந்தண் புனல் வரு காவிரி ஆலந்துறை'' எனப் புள்ள மங்கைத் தலத்தில் ஆலந்துறைக்

கோயிலையும், ''குன்றளூரில் கரைக்கோல இடியார்கடல் அடிவீழ்த்தரும் இடும்பாவனத்து இறையை'' என்னும், ''நறையூரில் சித்தன் சித்தீச்சரத்தை'', ''பனந்தான் திருத் தாடகை ஈச்சரத்து'' என்றும் பிரித்துக் குறிப்பிடுதல் காணத்தக்கது. இமயமலையில் சிவபிரானது உறையுள் கயிலை எனப் பெயர் பெறுவதுபோல, தலங்களில் உள்ள கோயில்களுக்கு இவ்வாறு பெயர் அமைவது உண்டு. இன்னும் சிறப்பாக, மதுரைக் கோயிலின் முதற்சுற்று மதிலுக்குக் கபாலி என்ற பெயர் உண்டு. அதனையும் சம்பந்தர் குறிப் பிடுகின்றார்.[21]

சில தலங்களில் தல விருட்சத்தின் பெயரே கோயிலுக் கும் பெயராக அமைந்தது. திருவானைக்கரப் பெருமானைச் சம்பந்தர், ''வெணாவலின் மேவிய எம் அழகா'' என்பார். வெண் நாவல்மரம் அத்தலத்தின் தல விருட்சம்.

எல்லாத் தலங்களிலும் இறைவன் இறைவியர்க்குப் பெயர் உண்டு. அவற்றுட் சிலவற்றைச் சம்பந்தர் குறிப்பிடு கின்றார். சிக்கல் தலத்து இறைவன் பெயர் வெண்ணெய்ப் பெருமான் என்பதையும், திருநெல்வாயில் இறைவன் பெயர் உச்சியார் என்பதையும், திருந்து தேவன் குடி ஈசன் பெயர் தேவதேவன் என்பதையும், திருநெய்த் தானத்துக் கடவுள் நெய்யாடியப்பர் என்பதையும் குறிப்பிட்டுத் திருப்பாச் சிலாச்சிராமத்து இறைவன் பெயர் மணிகண்டீசர் என்பதை 'மணிவளர்கண்டர்' என்று இலக்கிய நயம்படக் கூறு கின்றார். புள்ளிருக்கு வேளூர் இறைவன் பெயர் வைத்திய நாதன் என்ற பொருள் அமைய, ''செடியாய உடல் தீர்ப் பான் தீவினைக்கோர் மருந்தாவான்'' என்று பாடுகின்றார்.

சில தலங்களின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றார். திரு இந்திர நீலப் பருப்பதம் என்ற தலத்தில், இந்திரன் ஈசனை வழிபட்டான் என்பதைச் சுட்டுகின்றார். இதன் கருத்து என்னவெனில், வானுலகத்தவரும் மண்ணுலகத்திற்கு வந்து சிவபெருமானை வணங்குகின்றனர் என்பதாகும். ஒரு

காலத்தில், இந்திரன், அக்கினி, வருணன், பிரமன் முதலியோர்களைத் தெய்வம் என்று வேத முனிவர்கள் மந்திரம் கூறி, யாகத்தில் அவி சொரிந்து வணங்கினர். பிறகு அந்தச் சிறு கடவுட் கொள்கை மறைந்தது. சிவனே பரம் பொருள் என்று வேதங்களின் ஞான காண்டப்பகுதியாகிய உபநிடதங்களும் சிவாகமங்களும் நிறுவிய பிறகு, இந்திரன் முதலியோர் சிவபிரானை ஆகமவிதிப்படி வழிபட்டு நன்மை எய்தினர். சிவபிரான் மண்ணுலக மாந்தருக்கு அருள் புரிவதற்காக எளிவந்து, அருள்திருமேனி தாங்கித்திருக் கோயில்களில் வீற்றிருக்கின்றான். அங்கு அவனை வழிபட்டு வரம் பெறுதல் எளிது என்று, இந்திரன் முதலியோர் இங்கு வந்தனர். இறைவனது இந்த எளிமையைத் திருநாவுகரசர்.

''அயிராவணம் ஏறர்து ஆன் ஏறு ஏறி
அமரர் நாடு ஆனதே ஆரூர் ஆண்ட
அயிராவணமே''

என வியந்து பாடுவார். சம்பந்தரும் இதே கருத்தில், ''வானகம் இறந்து, வையகம் வணங்கவயங்கொள நிற்பதோர் வடிவினை உடையார் .................... அச்சிறு பாக்கமது ஆட்சி கொண்டாரே'' என்று பாடுகின்றார்.

இவ்வாறு வரும் கருத்தில் சமண சமயத்தின் கொள்கைக்கு மறுப்பு இருக்கிறது. மண்ணுலகைத் துறந்து, வானுலகம் அடைதலே முத்தி என்பர் சமணர். ''அவ்வாறு அன்று; முத்தியைத்தரும் இறைவன் ஒருவன் உண்டு. அவன் மண்ணுலகத்திற்கே வந்து, திருக்கோயில்களில் வீற்றிருந்து, அருளாட்சி செய்கின்றான். அவனை வழிபடுவோர் இங்கேயே உடம்புடன், சீவன் முத்திபெறலாம். அதுமட்டுமன்றி வானுலகத்தாரே இறைவன் எளிமையாக அருள் புரிவதைக் கருதி மண்ணுலகத்திற்கு வந்து வழிபடுகின்றனர்'' என்று, சைவக் கொள்கையை நிறுவுகின்றது மேலேகுறித்த தலப் பெருமை, இக்கொள்கையை அடிப்படையாகக் கொண்டே தலபுராணங்களில், அவ்வத் தலங்களில் தேவர்கள் வழிபட்ட செய்தி கூறப்படுகின்றது.

இதுவரை கூறியவற்றால் திருஞானசம்பந்தர் திருக்கோயில் வழிபாடு, இல்வாழ்க்கை முதலிய தமிழ் வாழ்க்கை மரபும், தமிழிசை மரபும், தழைக்கத் திருப்பதிகத் திருத்தொண்டு செய்தார் என்று அறிகின்றோம்.

## அடிக் குறிப்புகள்

1. திருநாவுக்கரசர் தேவாரம், 6 ஆம் திருமுறை: தனித் திருத்தாண்டகம் : 1 : 5
1. அ. புறநானூறு, பாடல் 241
2. திரு முருகாற்றுப்படை : அடி 238
3. மதுரைக் காஞ்சி : அடிகள் 612-616
4. ''பண்டு உரியர் சிலர் தொண்டர் போற்றும் பசுபதியீச்சரம்'' — 1 : 8 : 11
5. 2 : 44 : 5
6. காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண் பாடக் கவினார் வீதித்
தேந்தாம் என் றரங்கேறிச் சேயிழையார் நடமாடும் திருவையாறே 1 : 130 : 6
7. 2 : 6 : 4
8. 1 : 8 : 1, 2
9. 1 : 8 : 5
10. 3 : 9 : 6
11. 1 : 43 : 6
12. 2 : 5 : 1 ; 2 : 6 : 8
13. 1 : 43 : 2
14. 1 : 136 : 1
15. 1 : 112 : 1
16. 2 : 85 : 1
17. 2 : 67 : 4
18. 1 : 70 : 2
19. 1 : 105 : 11
20. 1 : 74 : 11
21. 3 : 52 : 1.

# 5

## நெறிவாழ

திருத்தொண்டு நெறியைப் பரப்ப இயக்கம் நடத்திய திருஞானசம்பந்தர், அந்நெறியின் அடிப்படையாகிய திருக்கோயில் வழிபாட்டை வலியுறுத்தினார் என்று சென்ற இயலில் விளக்கினோம். திருக்கோயில் வழிபாடு செய்யாதோர் திருத்தொண்டு நெறியைச் சாராதோர் ஆவர் என அவர் கூறுகின்றார்.

''நல்லார் தொழுதேத்தும் நாலூர் மயானத்தைச்
சொல்லா தவரெல்லாம் செல்லாதார் தொன்
[னெறிக்கே.''[1]

தொன்னெறி, பழைய நெறிபழைய நெறி. யாது என விளக்குவார் இப்பதிகத்திலேயே,

''நண்பால் சிவாய எனா நாலூர் மயானந்தே
இன்பா யிருந்தானை ஏத்துவார்க்கு இன்பமே''[2]

எனக் கூறுகின்றார். எனவே, சிவ நெறியைப் பழமையான நெறியென அவர் சுட்டுவதை அறியலாம்.

சிந்து வெளியில் கண்டெடுக்கப்பட்ட புதை பொருள்களுள் சிவலிங்கமும், மும்மூர்த்திகளும் ஒரு வடிவமாய்

விளங்கும் உருவமும் இருந்தன என்பதாலும், சங்க இலக்கியத்தில் சிவபிரானைப் பற்றிய குறிப்புகள் வருவதாலும் சைவநெறி பழமையானது என்று ஊகிக்கலாம். ஆனால் அப்பழங்காலத்தில் இருந்திருக்கக் கூடிய நெறிபற்றிய குறிப்புகள் கிடைக்கவில்லை. ஓரிரு தொண்மைக் கதைகள் மட்டும் அக்காலத்தில் வழங்கின. இறைவன் பாற்கடல் நஞ்சுண்டது, இராவணன் கைலை மலையை எடுத்தது என்பவற்றைக் குறிப்பிடலாம். நஞ்சுண்டமை, சிவபெருமானின் அழியாமையைக் காட்டும்; பிற தேவர்கள் அழியக் கூடியவர்கள் என்பதையும் காட்டும்.

மணிமேகலையில், சைவ வாதியிடம் மணிமேகலை சைவ சமயக் கொள்கைகளைக் கேட்டறிந்தாள் என வருதலால், அந்தக் காப்பியத்திற்கு முன்னரே சைவ சமயக் கோட்பாடுகள் வகுக்கப்பட்டிருந்தன என்று அறியலாம். அக்கோட்பாடுகளுள், சிவன் எட்டு மூர்த்தமாக இருக்கின்றான் என்பது, அதாவது ஐந்து பூதம், இரண்டு சுடர்கள் (சூரியன் சந்திரன்) உயிர் என்றவற்றில் இருக்கிறான் என்பது. எனவே சிவபிரான் பரம் பொருள் என்பதும் அவனது வியாபகத் தன்மையும் (அனைத்திலும், எங்கும் பரவி, எல்லாவற்றிலும் இருக்கின்றதாகிய தன்மை) அறியப் பட்டிருந்தன என்று ஊகிக்கலாம்.

பௌத்தம், சமணம்- இரண்டும் இறைத் தத்துவத்தை ஆராயவில்லை. எனவே அவை அவனை அறியா. ஆனால் அவனைப் பற்றி ஆராய்ந்த சமயங்கள் உண்டு. சிவபெருமான் அச்சமயங்களின் தாயாக விளங்குகின்றான் என்று ஞானசம்பந்தர் கூறுவார்.

> ''ஆயாதன சமயம் பல அறியாதவன்; நெறியின்
> தாயானவன்''[3]

இங்குச் சமயத்தை நெறி என்று கூறுகின்றார். அதற்கு வாழும் வழி என்பது பொருள். இறைவனைப் பற்றி ஆராய்ந்த சமயங்களாக அவர் குறிப்பிடுபவை ஆறு. இதனை அவர்,

''வேதமொடு வேள்வி பல வாயின
மிகுத்து விதி ஆறு சமயம்
ஓதியும் உணர்ந்தும் உள தேவர் தொழ
நின்றருள் செய் ஒருவன்''[4]

என்பதால் கூறுவார். வேதத்தை அடிப்படையாகக் கொண்ட சமயங்கள் ஆறு. அவை சிவபிரானைக் கடவுளாக வணங்குவன என்கின்றார். அவை, பாசுபதம், காளாமுகம், காபாலிகம், வாமம், வைரவம், மாவிரதம் என்பவை. இவைசிவபிரானைக் கடவுளாகக் கொள்வதில் சைவத்தோடு ஒத்தவை; வேதத்தை அடிப்படையாகக் கொள்வதிலும் சைவத்தோடு ஒருங்கு எண்ணப்படுபவை என்பதால் இவ் வாறு கூறினார். சூரியனை வணங்கும் சௌரம் என்னும் சமயத்தையும், கணபதி, முருகக் கடவுள் என்போரை முழு முதற் கடவுளாக- முறையே வணங்கும் காணாபத்தியம், கௌமாரம் என்பவற்றையும் சம்பந்தர் எங்கும் குறிப்பிட வில்லை.

திருஞானசம்பந்தர் காலத்தில் சிவபிரானின் பரம் பொருள் தன்மை அறிஞர்களால் அறியப்பட்டிருந்தது. சிவன் வழிபடு தெய்வம் மட்டும் அல்ல; தொல்காப்பியர் கந்தழி என்று கூறும் சொல்லுக்கு ஏற்ப, உலகைக் கடந்து விளங்கும் பரம் பொருளாகவும் உள்ளவன். கலை ஞானத் தால் ஊகித்து அறியப்படுபவன் சிவபிரானே. அனுபவ ஞானத்தால் நேரிடையாக உணரக் கூடிய உண்மைப் பொருளும் அவனே. வேதம், வேதாந்தம், வேத அங்கங்கள், ஆகமம், புராணம், மிருதிகள், இதிகாசம், கலைகள் பற்றிய நூல்கள்- இவற்றை ஓதியும் கேட்டும் சிந்தித்தும் உணர்வது கலைஞானம்; வாழ்ந்து உணர்வது அனுபவ ஞானம். இது; இரண்டு வகை. உலகியலில் வாழ்ந்து உணர்வது ஒன்று அருளியலில் வாழ்ந்து உணர்வது ஒன்று. இந்த ஞானம் யாவும் சுட்டிக் காட்டுவது பரம்பொருள் உண்மையே. அது சிவமே என்று ஞானசம்பந்தர் உறுதியாகக் கூறுகின்றார்.

''முன்னிய கலைப் பொருளும் மூவுலகின் வாழ்வும் பன்னிய ஒருத்தர்'' [5]

கலைகள் பற்பல; மூவுலக வாழ்வும் பலவகை. வாழ்வோரும் பற்பல மனநிலையினர். ஆயினும் கலைகளும் வாழ்வனுபவமும் தனித்தனியே முடிவான உண்மையாக (ultimate Truth)க் குறிப்பிடுவன எல்லாம், உண்மையில் சிவபரம் பொருளையே சுட்டும் என்பதை இங்குக் கூறுகின்றார்.

'அப்பரம் பொருள் உருவம் அற்றது. எனவே இடம், காலம், குணம் என்னும் வரையரைத் தன்மை (அளவு) எதுவும் அதற்கு இல்லை.

1) அது எங்கும் நிறைந்தது; எல்லாப் பொருள்களிலும் இருப்பது.

2) அறவாணர் சிந்தையில் அறமாக விளங்குவது.

3) அன்பரின் சிந்தையில் கலந்து அமுதம் போல இனிப்பது (இனிமை தருவது)

சிவன் இப்பரம்பொருள் தன்மை உடையவனாய் விளங்குவது மட்டு மன்றி, இடம், காலம், குணம் என்பவற்றுக்குத் தானே உட்பட்டு, முதியவனாகத் தோன்றியும், உடனே பாலனாக மாறியும் திருவிளையாடல் நிகழ்த்துவான். அவனை யார் காண முடியும்? எங்கே காணலாம் என்றால், தியானிப்பவரின் உள்ளத்தில், அவர் நினைத்த வடிவத்துடன் தோன்றுவான்?

இக்கருத்தெல்லாம் அமையச் சம்பந்தர் பாடுகின்றார்:

''அருத்தனை அறவனை அமுதனை நீர்
விருத்தனைப் பாலனை வினவுதிரேல்
ஒருத்தனை அல்லது இங்கு உலகம் ஏத்தும்
கருத்தவன் வளநகர் கடைமுடியே'' [6]

அருத்தம் என்பது அருத்தப் பிரபஞ்சம். வேதம் சப்தப் பிரபஞ்சம்; உலகம் அர்த்தப் பிரபஞ்சம் உலகிலும் பொருள் களிலும் உள்ளுறையும் பொருள் அவன், அறம் உலகியற் கடமை அதன் தலைவனாய் நின்று நடத்துபவன் அவன். அமுதம் என்பது அன்பரின் அனுபவம். அவர்க்கு உடனாய் நின்று அவ்வனுபவத்தை அளிப்பவன் அவன்,- இப்பாடலில் சிவபிரான் மக்களோடு நெருக்கமாக உள்ளான் என்பதை உணர்த்துகின்றார். அதே சமயம், 'ஒருத்தனை' என்று அவனது பரம் பொருள் தன்மையையும், அதாவது எல்லா உலகுக்கும் மக்களுக்கும் மற்ற தெய்வங்களுக்கும் ஒரு தனித்தலைவனாய் விளங்கும் தன்மையையும்- உருவம் கடந்த தன்மையையும், அருளால் உருவத்தை மேற் கொள்ளும் தன்மையையும் உணர்த்துகின்றார்.

இங்கு ஒரு நுட்பமும் வைத்துள்ளார். உலகம் ஏத்தும் கருத்து அவன் என உலக மக்கள் யாவரையும் குறிப்பிட்ட மையால், எந்தச் சமயத் தெய்வங்களின் வடிவமும் அவனே என்று அறிவிக்கின்றார். இதனையே, ''நானாவித உருவால் நமை ஆள்வான்''[7] என்றும், ''கோல வடிவு தமதாம் கொள்கை அறிவொண்ணார்''[8] என்றும் கூறுவார். உருவம் பலவாயினும் இறைவன் ஒருவனே என்னும் கருத்தில் ''ஏக பெருந்தகையாய எம்மான்'' என்பார்[9]

சிவனே பரம் பொருள் என்ற சிவபரத்துவத்தை,
''தேவரும் அமரர்களும் திசைகள் மேலுள்ள தெய்வமும்
யாவரும்மறி யாததோர் அமைதியால் தழலுருவினார்
மூவரும் மவர் என்னவும் முதல்வரும்மிவர் என்னவும்
மேவரும் பொரு ளாயினார் மேயது விளநகரே''[10]

என்னும் பாடலுள் நிலைநாட்டுகின்றார். பரம்பொரு ளுக்கு இரண்டு தன்மைகள் உள. ஒன்று கலப்பு(Immanance) ஒன்று கடப்பு (Transcendence) தழல் உருவானார் என்று இப்பாடல் கூறுவதிலேயே இவ்விரண்டு தன்மைகளும் உள்ளன. அந்த நெருப்பின் சோதி எங்கும் பரவியுள்ளமை

''பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப் படர்ந்த தோர் படரொளிப் பரப்பாய்''—விளங்குவது கலப்புத் தன்மை. அதுவே இறைவன் என்னும் சொல்லால் அந்தச் சோதியின் அடி எது, முடி எது எனக் காண இயலாத தன்மை கடப்புத் தன்மை அதுவே கடவுள் என்னும் சொல்லால் குறிக்கப்படுவது.

அடுத்து, 'மூவரும் அவர்' என்ற கருத்தை நோக்கு வோம். தோன்றி, நின்று, மறைவது உலகம், அது தானே தோன்றி, நின்று மறையாது. அவ்வாறு நடத்துபவன் உண்டு. அவன் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களையும் செய்ய மூவரை நியமிக்கின்றான். அவர் களைக் கொண்டு செய்விக்கின்றான். இவர்களின் உள்ளே, உயிருக்கு உயிராக நின்றும், அதே சமயம் வேறாக அவர் களின் தலைவனாக - நின்றும் முத்தொழில்களைச் செய்விக் கின்றான்.

இவ்விரண்டு கருத்தாலும் சிவபரத்துவத்தை நிலை நாட்டுகின்றார். சிவபிரானின் கடப்புத் தன்மையை மற்றொரு பாடலில், ''சொல் தெரியாப் பொருள், சோதிக்கு அப்பால் நின்ற சோதிதான்'' ''என்று தெரிவிக் கின்றார். வேதங்களும் அவனை உணரமாட்டார்;எத்தகைய வருடைய அறிவையும், அனுபவத்தையும் கடந்த ஞான வடிவம் அவன் என்பது இதன் பொருள்.

படைப்பவன் பிரமன், காப்பவன் திருமால், அழிப்பவன் உருத்திரன். இம் மூவர்க்கும் சிவபிரானே தலைவன். எனவே அவர்களின் பதவிகளை முடித்து, அவர்களையும் இயற்பிற்கு உட்படுத்தும் மகாசங்காரருத்திரனும் அவனே என்ற கருத்தில், ''கறைமல்கு கண்டன் கனல் ஏரி ஆடும் கடவுள்''[12] என்று கூறுகின்றார். இதில் ஒரு நயம், பாற் கடல் கடையும் காலத்தில் எழுந்த ஆலகால நஞ்சை உண்டு,

கறுத்த கழுத்தைப் பெற்று, தேவரையும் மூவரையும் காக்கும் காலத்தில் காத்த சிவபிரான், அழிக்கும் காலத்தில் அவர்களை அழித்தலே செய்தான்.

இறைவனைச் சம்பந்தர் ஒரு தத்துவ ஞானிபோல, உணர்ச்சி இன்றி, இலக்கணங்களை மட்டும் கூறிக் குறிப்பிட வில்லை. அன்பு நெறியில் முதிர்ந்து, காதலாகிக் கசிந்து நின்று, பாடுகின்றார்; அனுபவித்துக் கவிதை பாடுகின்றார். அவரது அன்பிற்கும் உள்ளக் கனிவிற்கும் ஏற்ற வண்ண மாகவே, இறைவன் அளக்க இயலாக் கருணையுடன் அவருடைய மெய்யுணர்விற்குப் (உயிரின் உணர்விற்கு) புலப் படுகின்றான். ஆதலின், "தாய் அவன் உலகுக்கு" என்று மனங்கசிந்து பாடுகின்றார். "பெண் ஆகிய பெருமான்" என்று கூறுகின்றார்.

சிவபிரானது கருணையை- திருவருளை- சைவமரபில் அவனது பெண்மைக்கூறு என்றனர். சம்பந்தர், "ஒருமை பெண்மை உடையன்" என்றார்.

இறைவன் உண்மையில் ஆணா, பெண்ணா? இவ்வினா விற்குப் "பெண் ஆண் அலி ஆகும் பித்தா" என்று விடை சொல்வார் சம்பந்தர். பரம்பொருள் ஆணும் அன்று; பெண்ணும் அன்று. அது உருவம் இல்லாதது. அதுஉருவத்தை மேற்கொள்வது திருவருளினாலேயே ஆகும். திருவருளைப் பெண்கூறு என்று சைவ மரபு கருதி- வந்துள்ளது. ஆகவே, 'அரிதரு கண்ணியாளை ஒரு பாகமாக அருள் காரணங்கள் வருவான்' என்று பாடும் திருமுறை. இறைவன் எந்த உரு எடுத்தாலும் அதில் பெண் கூறு கலந்தே இருக்கிறது. வெளிப் படையாக, அவனது இடப்பாகத்தில் உமையம்மை தோன்று வதும் உண்டு; அவனது உடம்பில் சரிபாதி பெண்ணாகத் தோன்றுவதும் உண்டு.

ஞானசம்பந்தருக்கு மூன்றாண்டுப் பருவத்தில் இறைவன் தோன்றி நல்கிய காட்சி பெண்ணொருபாகக் காட்சியாக (அர்த்த நாரீசன்) இருந்தது. பிறகு அம்மை தனித்து ஞானப்

பாலை ஊட்டிய நிகழ்ச்சியும் நடந்தது. அவர் தமக்கு முதலில் காட்சிப்பட்ட அர்த்த நாரீச வடிவத்தை முதற் பாட்டில் ''தோடுடைய செவியன்'' என்பதால் குறிப்பிடு கின்றார்.

அம்மை வேறு; அப்பன் வேறு அல்லர் அம்மையப்பனாக, அம்மையாக, அப்பனாக சிவபரம் பொருளே தோன்று கின்றது. இதனைச் சம்பந்தர்,

''உரை உலாம் பொருளாய் உலகாளுடையீர் சொலீர்
வரை உலாம் மடமாதுடன் ஆகிய மாண்பதே'' [13]

என்ற அடிகளால் தெரிவிக்கின்றார். உரை என்பது சொல். சொல்வேறு, பொருள் வேறு அல்ல. அது போல அப்பன் வேறு; அம்மை வேறு அல்ல! பரம்பொருளைஅம்மை யப்பனாகவே வழிபடுவது தமிழ்மரபு.

அம்மை ஆகிய திருவருள் சம்பந்தருக்கு அளித்த அழகுக் காட்சியை, தமது உணர்வுக்கு வந்த உவகையோடு கவிதை யாகப் பாடுகின்றார்.

''வாள்நிலா மதிபோல் நுதலாள்மட
மாழையொண்கணாள் வண்தரளந்நகை
பாணிலாவிய இன்னிசை ஆர்மொழிப் பாவையோடும்
சேணிலாத்திகழ் செஞ்சடையெம் அண்ணல்'' [14]

அம்மையப்பனை நல்ல இல்லறத் தம்பதியராகவே உணர்ந்து, 'பெண்ணிளல்லாளொடும் பெருந்தகை இருந்ததே எனப்பாடுகின்றார்.

மற்றும்,

1) ''போகம் ஆர்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாகம் ஆர்த்த பைங்கண் வெள்ளேற்றண்ணல்'' [15]

2) ''வாருறு மென்முலை நன்னுதல்
ஏழையோடு ஆடுவர்'' [16]

என்றும் பாடுகின்றார்.

குழந்தைக்குத் தாயும் தந்தையும் ஆகும் பெற்றோர் போல, உலகின் உயிர்களுக்குத் தாயும் தந்தையும் சிவபரம் பொருளே. உலகின் பதியும் (தலைவன்) அவனே. தலைவனாக— வேறாக- இருப்பது மட்டும் அன்றி, உயிர்களின் உள்ளே உறையும் உயிராக, அவை அறியாமலே இருந்து, அவற்றின் அறிவு இயங்குமாறு செய்பவன், அவன்.

1) ''ஊன் ஆர்தரும் உயிரான்''

2) ''உள்நிலாவு ஆவியாய் ஓங்குதன் தன்மையை
விண்ணிலார் அறிகிலா வேத வேதாந்தனூர்'' 17

இறைவன் முத்தொழில் செய்தலை முன்பு கூறினோம். அவற்றுடன் அவன் உயிரின் அறிவை மறைத்தல், அதற்குப் பக்குவம் வரும் பொழுது அருளல் ஆகிய இரண்டு தொழில்களையும் ஆற்றுவதைக் குறிப்பிடுகின்றார்.

''தேறிய சிந்தை வாய்மை தெளிவிக்க நின்ற
கரவைக் கரந்து திகழும்'' 18

மறைத்தலில் எவ்வளவு மாயம் இருந்ததோ அவ்வளவு கருணை, அருளுதலில் இருக்கிறது என்று அடியார்கள் உணரும் உணர்ச்சியை இதில் வெளிப்படுத்துகின்றார். உயிரின் தெளிந்த அறிவில் உண்மையைத் தோன்றச் செய்வதற்காக, இறைவன் அதுவரை மறைத்து நின்ற தனது தொழிலை (திரோபவம்) விலக்கிக் கொள்வான். இதில், ''வாய்மை தெளிவிக்க'' என்று பதிஞானம் வழங்குவதைக் குறிப்பிட்டு, அருளல் தொழிலைச் சுட்டினார். பதிஞானமே சிவஞானம். அதன் பயனாகவே வீடுபேறு எய்த முடியும். இதனை, ''ஞானமும் நன்பொருளாகி நின்ற நன்மையே'' என வேறு இடத்தில் கூறினார்.

இந்த ஐந்து தொழில்களையும் சிவபிரானது அண்ட வெளிக் கூத்தாகச் (Cosmie Dance) சைவ சமய அருளியலாளர்கள் பழங்காலத்திலேயே கண்டு, அவனை நடராசப்

பெருமானாக வழிபட்டனர். சைவ சமய மரபாக அது நிலைத்து, நடராசர் திருவுருவம் வழிபாட்டுத் திருமேனி ஆயிற்று. ஞானசம்பந்தர் தில்லையம்பலக் கூத்தினை,

''கூத்து உகந்த பேரம்பலத் துறைவாய்''[19]

என்றும் கைலை மலையில் பூத கணம் சூழ ஆடும் கூத்தை. ''இசை பாடுவ பாரிடமா, நட்டமே நவில்வாய்''[20] என்றும் பாடுவார். இவை உமையம்மை மகிழ்ச்சியோடு காணும் நடனம். ஏன் எனில், இவை படைத்தலும் காத்தலும் ஆகிய நடனங்கள். அழிக்கும் தொழிலை அவள் விரும்ப வில்லை யாம். தாயல்லவா? என்றாலும் பெருமான் அழிக்கும் தொழிலாகிய சங்கார தாண்டவத்தைச் செய்கின்றானாம்.

''காண்டகு மலைமகள் கதிர்நிலா
முறுவல் செய்தருள வேயும்
பூண்ட நாகம் புறங்காடு அரங்கா
நடமாடல் பேணி''[21].

உமையம்மையார் பாட, இறைவன் நடனம் ஆடுவதாக அவர் வேறிடத்தில் பாடுவதை 'அருளல்'–கூத்தாகக் கருத லாம்.

பிற்காலத்தில் சைவசித்தாந்தம் உயிர் வகை, விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் என மூன்று என்று கூறும். சம்பந்தர் அவ்வாறு பிரித்துக் கூறவில்லை எனினும், சாதாரண உயிர்களுக்கும் அருள் பெறும் உயிர்களுக்கும் உள்ள வேறுபாட்டைக் குறிப்பாக உணர்த்துகின்றார்.

''முன் உயிர்த் தோற்றமும் இறுதியுமாகி
முடியுடை அமரர்கள் அடிபணிந்தேத்தப்
பின்னிய சடைமிசைப் பிறை நிறைவித்த
பேரருளாளனார்''[22]

என்னும் பாடலில், தக்கன் சந்திரனுக்குச் சாபம் கொடுத்த வரலாறு பிணைந்து கிடக்கிறது. முழுமதியாக

இருந்தவனைத் 'தேய்ந்து ஒழிக' எனச் சாபமிட்டான் தக்கன். சந்திரன் சிவனைத் தஞ்சமடைந்தான். அப்போது அவன் இருந்த நிலை, பிறையாகத் தேய்ந்த நிலை, அவனைச் சிவபிரான் தன் தலையில், சடைமேல் தரித்துக் கொண்டு, வளராமல், தேயாமல் அப்படியே இரு என்று அருள் செய்தார். உலகிற்கு மட்டும் அவன் 15 நாள் வளர்ந்தும் 15 நாள் தேய்ந்தும் வருமாறு அருள் செய்தார்.

சம்பந்தர் இப்பாடலில், 'உயிர்களுக்குப் பிறவியும் இறப்பும் அளித்து' என்ற கருத்தை அடுத்தே இக்கதையை உட்கொண்ட, 'பிறை நிறைவித்த' என்னும் தொடரை அமைப்பதால் ஒரு குறிப்புப் பொருள் தோன்றுகின்றது. அது, பக்குவ ஆன்மாவிற்கு வீடுபேறு அளித்துத் தன்னோடு இருக்க வைத்தலைக் குறிக்கும் கருத்துத் தோன்றுகின்றது.

'நிறைவித்த' என்ற சொல்லாட்சி கருதத் தக்கது. சிவபிரான் பிறையை நிறைமதியாக்கவில்லை. நிலையான வாழ்வளித்தான். ஆன்மாவிற்கு நிறைஞானம்- முழுஞானமாகிய பதிஞானம்-வழங்கினான். அச் செயலுக்குப் பொருந்தவே 'பேரருளாளர்' என்ற சொல்லும் அமைகின்றது.

மற்றொரு நயமும் இங்கே காணத்தக்கது. உலகையே அழிப்பதாகப் பெருகி வந்த கங்கைப் பெரு வெள்ளத்தைச் சிவபிரான் தன் சடையினுள் மறைத்து விட்டான். ஆனால் தஞ்சமடைந்த சந்திரனுக்குச் சடைமீது இடம் அளித்தான். பொங்கியெழுபவரின் நிலை என்னவாயிற்று! பணிந்து சரண்புகுபவரின் நிலை எவ்வாறு உயர்ந்துள்ளது!

இறைவனைச் சரண்புகுவோர், அன்பு காரணமாக, எந்நாளும் அவனையே சார்ந்திருக்க விரும்புகின்றனர். அது நிகழவேண்டுமானால், இடையில் தடையாயிருக்கும் மலம் நீங்க வேண்டும். உயிரைப் பற்றியிருக்கும் அந்த அழுக்கு தானே நீங்காது; உயிரால் நீக்கிக் கொள்ள இயலாது. அந்த மலம் நீங்கும் வண்ணம் இறைவன் திருவுள்ளம் கொள்கின்றானாம்,

"தவ முயல் தரு முனிவர்கள் தம
மலம் அறுவகை
மனம் நினைதரு மறைவனம் அமர்பரமனே"

என்பது சம்பந்தர் வாக்கு. இங்கு மலம் எனக் கூறுவதை மற்றொரு பாடலில் 'இருள்'[23] என்று கூறுகின்றார். மெய்ஞானத்தை ஒளி என்பார் எனவே மலம் என்பது அறியாமையை விளைவிப்பது என அறியலாம். சம்பந்தர் 'ஊனத்து இருள் நீங்க வேண்டின் ஞானம் தா என்று இறைவனை மன்றாடி வேண்டிக் கொண்டு வழிபடவேண்டும் என்பார்,[24]

மெய்ஞ்ஞானம் எய்தினால் அன்றிச் சிவபிரானை அடைய இயலாது. நூல்களைக் கற்பதால் வருவதன்று மெய்ஞ்ஞானம். பதியாகிய இறைவனே உயிருக்கு உணர்த்த வேண்டும். கல்வி கேள்விகள் சிறந்தவையே என்றாலும், உயிர் பாசத்தால் மறைப்புண்டிருக்கும் நிலையில் பெறுவதால் அவை பாச ஞானத்தையே உண்டாக்கும். உயிர் தன்னை அறிவதாகிய அறிவு பசுஞானம் எனப்படும். அதுவும் இறைவனை அறிய உதவாது. எனவே. இறைவனே உயிர்க்கு உயிராய் நின்ற நிலையிலோ, குருவாக வந்தோ, தெய்வ நிலையில் 'காட்சி' கொடுத்தோ மெய்ஞ்ஞானத்தை உணர்த்த வேண்டும். ஆகவே அந்த ஞானம் பதிஞானம் எனப்படும். பதியால் பதியை அறிவது பதிஞானம்.

இதனைப் பழ மரபுக் கதை ஒன்றால் விளக்குகின்றார் ஞானசம்பந்தர். அந்தக் கதைக்கும் விளக்கம் தருகின்றார். சனகர் முதலிய முனிவர்கள் நால்வர்க்கும் சிவபிரான் தட்சிணாமூர்த்தி வடிவில், கல்லால மரத்தின் நிழலில் இருந்து உபதேசம் செய்தான். அந்த உபதேசம் யாது என்று கூறுகின்றார்.

"நூலடைந்த கொள்கையாலே நுன்அடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர் கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல் மேவி அருமறை சொன்ன
தென்னே"[25]

அறத்தை மறையாகச் சொன்னது என்று கூட்டியுணர வேண்டும். முனிவர் நால்வருக்கும், வேதங்களால் கூறப் பட்டதாகியஇறைநிலையை-நிறை நிலையை-அடைதற்கான அரிய இரகசியத்தை- பதிஞானத்தை- அனுபூதிஞானத்தைச் சிவபிரான் உணர்த்தினான் என்பது இதன் கருத்து.

உயிர் தானே முயன்றாலும் சிவபிரானை உணர இய லாது என்பதைச் சம்பந்தர் பதிகந்தோறும் பாடும் பழமரபுக் கதையாகிய 'பிரமனும் திருமாலும் இறைவனின் அடி முடி தேடிய 'கதையில் வைத்து' ஒரு பதிகத்தில், உணர்த்து கின்றார்.

> "மீத்திகழ் அண்டம் தந்த அயனோடு மிகும் மாலும்
> மூர்த்தியை நாடிக் காணவொனாது முயல்விட்டு ஆங்கு
> ஏத்த வெளிப்பாடு எய்தியவன்"[26]

உயர்வான உலகமாகிய சத்தியலோகத்தின் தலைவன் பிரமன். திருமால் அவனைவிட உயர்ந்தவன். இவ்விருவரும் சிவமூர்த்தியைத் தேடி, காண இயலாமல், பிறகு முயற்சி யைக் கைவிட்டு, அவனை வழிபட்டனர். பாடிப் பரவினர். அவன் அதற்கு மகிழ்ந்து, அவர்களுக்குத் தோன்றியருளி னான் என்று கூறுகின்றார். இக்கதைக்கும் சம்பந்தர் விளக் கம் தந்துள்ளதை அறியலாம்.

இதுவரை கூறியவற்றால் ஞானசம்பந்தர் நிறைநிலை யாகிய பரம்பொருளை அடையும் நெறியாக அன்பு நெறியை வற்புறுத்துவதை அறியலாம்.

இறைவனிடம் நமக்கு எளிதில் அன்பு தோன்றாது. அதைப் பெறுவதற்கு அவன் திருவடியையே சரண் அடைந்து, உலகியலில் மனம் செல்லுதலாகிய குறை பாட்டை அவனிடம் சமர்ப்பித்து, அதனை நீக்கி, அவனுக்கே அன்பு செய்யும் மனத்தைத் தரவேண்டும் என்று

வழிபட வேண்டும்; திருத்தொண்டு செய்ய வேண்டும். இதனை,

''வேனல்களை விழித்திட்ட வெண்ணெய்ப் பெருமான் அடி
ஞானமாக நினைவார் விளை ஆயின நையுமே''[27]

என்று சம்பந்தர் மொழிகின்றார்.

இனி அத்திருத்தொண்டு பற்றியும் அதன் உயிர் நாடியாய் அமைந்த அன்பு நெறியைப் பற்றியும் நோக்குவோம்.

அவர் கூறும் ஞானச் செய்திகளை அறுதியிட்டு, உறுதி யாக உரைக்கும் பான்மையினர் ஆதலால், திருத்தொண்டு நெறி வீடுபேறு தரும் என்று திட்பமாக மொழிகின்றார்.

''விமுதவல்ல சடையான் வினை உள்குவார்க்கு
அமுதநீழல் அகலாததோர் செல்வமாம்'' [28]

விம்மிதம் விளைக்கும் செயல்களைச் செய்த சடாதர மூர்த்தியாகிய சிவபிரானின் திருத்தொண்டினை நினைந்து செய்வோர்க்கு, அவனது திருவடி நீழலாகிய என்றும் நீங்காப் பெருவாழ்வு கிடைக்கப் பெறுவது உறுதி என்பது இதன் கருத்து. சம்பந்தர் கூறும் திருத்தொண்டு நெறிப் பற்றிய கருத்துகளை வழிபாடு, அருள் வாழ்வு என்றும் இரண்டு பிரிவாகக் காண்போம். வழிபாடு சாதனம், அருள் வாழ்வு சாத்தியம்.

உலகியலில் வாழ்வோர் முதற்கண் சிவபிரான் திருக் கோயிலுக்குச் சென்று, கும்பிடத்தொடங்கி, மனத்தை அவன் சார்பிலும் திருப்பினால் நாட்போக்கில், இறைவன் அவர்தம் மனத்தில் இடம் பெறுவான். இது ஓர் எளிய தொடக்கம். ''புடைபடுவார் தம் மனத்தார்'' [29] என்பர் சம்பந்தர். பிறகு திருக்கோயில் செய்யும் அடியாரோடு கூடிச் சென்று வழிபடவேண்டும். அதனால் இறைவனிடம் பக்தி செய்யப் பழகலாம். அந்தப் பாவனை வரும். இதனையே

இயக்கப் பாணியில், மக்களை இறை வழிபாட்டுக்கு அழைக்கும் முறையில்,

''வம்மின் அடியீர், நாள் மலரிட்டுத் தொழுதுய்ய
உம் அன்பினோடு எம் அன்பு செய்து ஈசன் உறை
கோயில்'' 30

என்று பாடுகின்றார். இறைவனிடம் நாம் அன்புசெய்ய வேண்டும் என்றால், அவன் நம் மனத்தை ஈர்க்கவேண்டும். அதற்கு என்ன வழி? நாம் அவனைத் தோத்திரம் சொல்லிப் பாடல் பாடி வாழ்த்துதல் தான். அவற்றில் உள்ள இறைவனின் புகழ் நம்மை அவனிடம் ஈர்க்கும். அவனது புகழை ஏத்துவது, இவ்வீடுபாடு உண்டாவதற்கும், நமது சிறுமையை உணர்வதற்கும்தாம்.

''வாழ்த்துவார் மனத்துளான்''

என்பர் சம்பந்தர். மனத்தை ஈர்ப்பது மட்டும் அன்றி, தவறு செய்து நன்மை அல்லது இன்பம் அடைய எண்ணம் எழுந்தாலும், அதை மாற்றுவான், நல்ல வழி காட்டுவான் என்பார்.

''நற்சேவடிக்கே
பாடரவத் திசை பயின்று பணிந்தெழுவார்
தம்மனத்தில்
கோடரவம் தீர்க்குமவன் கோளிலி எம் பெருமானே''31

வழிபாட்டில் பிரார்த்தனை மிகவும் இன்றியமையாதது. இதனைப் பாடுகிடத்தல் என்பர் பழந்தமிழ் ஆசிரியர். குறை வேண்டுதல் என்றும் கூறுவர். பின்னது அரசறுக்கும் முன்னது இறைவனுக்கும் தம் வேண்டுகோளைக் கூறி, அதை நிறைவேற்றுமாறு மன்றாடுதல். ஐந்து புலன்களின்பால் செல்லும் மனத்தைத் தடுத்து, இறைவனிடம் அன்பு கொள்ளுமாறு செய்யும்படி அவனையே பிரார்த்தனை செய்யவேண்டும். ''இடையறா அன்புனக்கு என் ஊடகத்தே

நின்றுருகத் தந்தருள் எம் உடையானே'' என்று மணி வாசகப் பெருமான் பிரார்த்தனை செய்கின்றார்.

திருஞானசம்பந்தர் தம் பொருட்டு அன்று என்றாலும், மக்களுக்காக இத்தகைய வேண்டுகோட் பாடல்களைப் பாடியளித்துள்ளார்.

1) ''தாயும் நீயே தந்தை நீயே சங்கரனே அடியேன்
ஆயும் நின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்றது
உள்ளம்''[32]

2) ''ஒல்லை ஆறி உள்ளம் ஒன்றிக் கள்ளம் ஒழிந்து
வெய்ய
சொல்லை ஆறித் தூய்மை செய்து, காமவினை
அகற்றி
நல்லவாறே உன்தன் நாமம் நாவில் நவின்றேத்த
வல்லவாறே வந்து நல்காய் வலிவலம்
மேயவனே''[33]

சம்பந்தர் தாம் இயக்கம் நடத்தியதற்கு ஏற்ப இவ்வாறு திருக்கோயிலில் பிரார்த்தனை செய்து வழிபடுவதற்காக மக்களை அழைக்கும் படியான பல பாடல்களைப் பாடுகின்றார். அந்தப் பிரார்த்தனைக்குப் பயன் கிடைக்கும் என்று உறுதி கூறுகிறார்.[34] அதுவே சமண, பௌத்த சமயக் கருத்துக்களுக்கும், பழக்க வழக்கங்களுக்கும் எதிராக, மாற்றாக- அதே சமயம் தமிழ்மரபின்மறு மலர்ச்சியாக மக்களை சம்பந்தர் அணி திரட்டிய செயலாகும். தமிழ்நாட்டு ஊர் தோறும் இந்த அவரது இயக்கம் நடத்தப்பட்டதற்கான அடையாளம்தான் அவ்வூருக்கு அவர் பாடியளித்த பதிகம். மக்களின் பண்பாடு மீண்டும் தமிழ்மொழி, தமிழ் மரபுகளின் படி அமைய வேண்டும் என்பதற்காகச் சம்பந்தர் வேத, வேதாந்த, ஆகம நூல்களின் சாரத்தையும் தமது அனுபவத்தின் சாரத்தையும் ஆற்றல்மிக்க தமிழால்-வேதமேபோன்ற தமிழால்-பாடிப் பண்பாட்டு மாற்றத்தை உண்டாக்கினார். அவர் வாயிலாக, சிற்றூர் தோறும் வாழ்ந்த மக்களை எட்டியது மறைத் தமிழ்.

மலரும் நீரும் தூவி இறைவனை வழிபடுதல் தமிழ் மரபு என்று முன் இயலில் எடுத்துக் காட்டினோம். அதையும் பிற எளிய வழிபாட்டுச் சடங்குகளையும் பல பாடல்களில் எடுத்துக் கூறுவார் சம்பந்தர்.[35] சடங்கு மட்டும் போதாது; அதனை அன்புடன் செய்ய வேண்டும். ''பக்தி மலர் தூவு முத்தியாகுமே'' என்பார் சம்பந்தர்.

சிவபெருமானுக்கு நிவேதனமாகப் படைக்கும் உணவு எதுவாக இருக்க வேண்டும் என்பதில், சைவ சமயத்தைச் சார்ந்தவர்களிடையே கருத்து வேறுபாடு இருப்பதைச் சுட்டிக் காட்டித் தமது கருத்தையும் கூறுகின்றார் சம்பந்தர் சில அன்பர் மாமிசத்தைப் படைக்கலாம் என்றனர்; சிலர் அது தீயது என்றனர். காபாலிகர்' பாசுபதர், காளாமுகர் ஆகிய சைவர்கள் மாமிச உணவை நிவேதனம் செய்வோர். சமண, பௌத்தரோ, மாமிச உணவை உண்ணலே தீது என்ற கொள்கை உடையோர். இந்த நிலையில் மக்களுடைய குழப்பத்தைப் போக்குவதற்காக ஞானசம்பந்தர் கருத்துக் கூறுகின்றார்.

'ஊன் உணவை நிவேதிப்போரும் தாவர உணவைப் படைப்போரும் இறைவனிடம் கொண்ட அன்பினால், தாம் நன்று எனக் கருதும் உணவை அவனுக்குப் படைக்கின்றனர். ஆதலால் அவனுக்கு அது ஏற்புடையதே. என்று கூறுகின்றார்.

''ஊனொடு உண்டல் நன்றென ஊனொடு உண்டல் தீதென
ஆன தொண்டர் அன்பினால் பேச நின்ற தன்மையான்''[36]

ஆகமம் தாவர உணவையே நிவேதிக்க வேண்டும் என்று கூறியிருந்தும், ஞானசம்பந்தர் அன்பு நெறிக்குச் சிறப்பிடம் கொடுத்துக் கூறியதற்கு அன்புடைமையின் சிறப்பு மட்டும் காரணம் அன்று, மக்களுள் பலவகையினரை

யும் தழுவிச் செல்ல வேண்டும். சைவ சமயம் எல்லோர் வீட்டிலும் இடம் பெற வேண்டும். அதற்கு ஒரே வழி அடிப் படையை மட்டும் வலியுறுத்தினால் போதும்; சடங்கு களைப் பெரிது படுத்த வேண்டாம் எனச் சம்பந்தர் கருதிய தைக் காட்டும். இது இயக்கப் பண்புகளுள் ஒன்று.

சடங்குகளைப் பெரிது படுத்தாமை போல், சாதிகளை யும் சம்பந்தர் பொருள் உடைய பிரிவுகளாக எண்ண வில்லை. சான்று: அக்காலச் சமுதாயம் தீண்டாதவராகத் தாழ்த்தி ஒதுக்கப்பட்ட சாதியாக வைத்த பாணர் சாதி யைச் சேர்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தமது அருகிலேயே வைத்துக் கொண்டார் சம்பந்தர். அவர் வேண்ட, அவர்தம் உறவினர்கள் வாழும் ஊருக்குச் (தரும புரம்) சென்றார். எல்லாவற்றுக்கும் மேலாகச் சாத்தமங் கையில், சம்பந்தரின் மனக் கருத்தை அறிந்து, நீலநக்கர் என்ற அந்தணர் தம் வீட்டின் நடுமுற்றத்தில், யாக குண்டத்தின் அருகிலேயே, திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியாரும் தங்கச் செய்தார். அதுவே இறைவன் திருவுள்ளத்திற்கும் உவப்பு எனச் சொல்லாமல் சொல்வது போல், யாககுண்டத்தில் நெருப்புச் சுடர்விட்டு எரிந்தது. சம்பந்தர் திருவுள்ளம் சாதிகளை ஒப்பவில்லை; நாவரசரின் திருவுள்ளமும் அப்படியே. 'சிவபிரானுக்குத் தொண்டரா யின், புலையரும் யாம் வணங்கும் கடவுள் போன்றவர்' என்று பாடியவர் அவர்.[37]

திருத்தொண்டு நெறியைப் பரப்ப இயக்கம் தொடங்கி நடத்திய ஞானசம்பந்தர், தொண்டர்களுக்கு இடையே சாதி உயர்வு தாழ்வு எண்ணம் இருத்தலாகாது என்று எண்ணம் இவற்றிலிருந்து தெரிய வருகின்றது.

உலகியலின் நெருக்குதலால், ஆன்மாவை மறைத்திருக் கும் மலத்தின் மறைப்பால், வழிபடும் போது இறைவனின் நினைவில் உள்ளம் தோயாமல் இருக்கும். அதற்காக,

வருந்தி, நொந்து, தம் நிலைக்காகத் தம்மையே பழித்துக் கொண்டு, இறைவனை உள் உணர்வினால் தேடித் தேடி ஏங்குகின்றவர்களுக்கு, அவன் இறங்கி அருள் புரிவான் என்று மொழிகின்றார் சம்பந்தர்.

1) ''நீடு மலரும் புனலும் கொண்டு நிரந்தரம்
தேடும் அடியார் சிந்தையுள்ளே திகழ்வான்''[38]

2) ''ஒளி கொள் மேனி உடையாய், உம்பராளீ என்று அளியராகி, அழுது, உற்று, ஊறும் அடியார்கட்கு எளியன்'' [39]

3) ''வள்ளல் வலஞ் சுழி வாணன் என்று
மருவி நினைந்து ஏத்தி
உள்ளம் உருக உணருமின்கள் உறுநோய் அடை
யாவே'' [40]

இவ்வாறு உலக நாயகன் ஆகிய சிவபிரானை வழிபட்டால் அவன் அருள் தருவான். எதற்கு? அவனிடம் நாம் அன்புகொள்வதற்கு அருள் செய்வான். இவ்வாறு தோன்றும் அன்பு, சாதாரண அன்பிலிருந்து வேறுபட்டது. இது, அவனடிக்கே உள்ளத்து அன்பை எல்லாம் கொட்டிச் சொரிவதாகும். இவ்வாறு அன்பு பெறுபவர்க்கு இறைவனைத்தவிர எதுவும் பொருட்டன்று.

''கொங்குலா வரிவண்டின் இசைபாடும் மலர்க்
கொன்றைத்
தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள்
பொருளலவே''[41]

என்பார் சம்பந்தர். இந்த மனநிலையைப் பெறுதலே ஆளாதல், அல்லது ஆட்படுதல், அல்லது ஆட் கொள்ளப் படுதல். இதுவே திருத்தொண்டு நெறியில் இறைவனால் அடியாருக்கு நல்கப்படும் ஏற்புடைமை (Recognition).

அடியாரின் வழிபாட்டை இறைவன் ஏற்றுக்கொண்டு செய்யும் எதிரளிப்பு (Response). சைவநெறியில் இது ஒரு குறிப்பிடத்தக்க கூறுபாடு அடியார் வாழ்வில் ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தும் திருப்பு மையம்.

ஆளாதல் என்பதை இறைவன் அருளுக்கு இலக்காதல் என்று பொதுவாக விளக்கலாம். ஆளாகின்ற திருத்தொண்டருக்கு இறைவனிடம் உள்ள அன்பின் மிகுதியால், அவர்கள் அவனைத் தமக்கு உறவுடையவனாக எண்ணுவர். தந்தை, தாய், நண்பர், காதலர் என உலகியலில் உறவுடையவராக உள்ளவரிடம் செலுத்தும் அன்பை இறைவனிடம் செலுத்துவர். அதற்கு எதிரளிப்பான (Reciprocal) அன்பை இறைவனிடத்திலிருந்து பெறுவர். முடிவான உண்மை நிறைநிலை 'அந்த நிறைவை அடைய விரும்புவோர் இறைவனிடம் உறவு கொள்க' என்று அறிவுரை பகர்கின்றார் சம்பந்தர்.[42] இறைவன் அடியார்களுக்குச் செய்யும் அன்பை, அருச்சுனன் கதையைக் கொண்டு,

''தனஞ்சயற் கறுத்து அவற்கு அளித்துடன்
காதல் செய் பெருமான்'' [43]

என்று கூறிப் புலப்படுத்துகின்றார். இவ்வாறு அடியாரும் இறைவனும் பரிமாறிக்கொள்ளும் அன்பைச் சேந்தனார், ''கொண்டும் கொடுத்தும் குடிகுடி ஈசற்கு ஆட்செய்மின்'' [44] என்று கூறுவார்.

ஞானசம்பந்தர் மூவாண்டுப் பருவத்தில் பெற்ற 'இறைக் காட்சி', ஆட்கொள்ளப்படும் அனுபவமேயாகும். அதனை அவர்,

''போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லா
தெனத்
தாதையார் முனிவுறத்தான் எனை ஆண்டவன்''

எனத் தெளிவாகக் கூறுகின்றார். மற்றோரிடத்தில் பிறர் அனுபவமாக, ''கனிந்தவரைக் கலந்து ஆட்கொள் வான்'' என்று கூறுகின்றார். பிறிதோரிடத்தில், ''ஆட் பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதிமாண்பும் கேட்பான் புகில் அளவில்லை'' என்று மொழிவார். வழிபடும் அடியார் களை இறைவன் எவ்வாறு எல்லாம் ஆட்கொள்கின்றான் என்பதைத் திருத்தொண்டர் புராணத்தில், அடியார் வரலாறுகளில் விரிவாகக் காண்கின்றோம்.

இறைவனுக்கு ஆட்பட்டு, அவன் மீது அன்பு முறுகப் பெறும் போது, அவன் திருப்பெயர் செபித்தல், சிவநெறியில் திருவைந்தெழுத்து ஓதுதலாக மரபுவழி வந்துள்ளது. சம்பந்தர் திருவைந்தெழுத்தின் பெருமையை இரண்டு பதிகங்களில்பாடுகின்றார். ஒன்று பஞ்சாக்கரத் திருப்பதிகம்; ஒன்று, நமசிவாயத் திருப்பதிகம். இவற்றுள் பஞ்சாக்கரத் திருப்பதிகத்துள், திருவைந்தெழுத்தே, அனைத்து மந்திரங் களும் வேதங்களுமாக விரிந்தது என்றும், அந்தணர் சந்தியா காலங்களில் செபிக்கவேண்டிய மந்திரம் திருவைந்தெழுத்தே என்றும் கூறுகின்றார். [45]

இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற பிறகு மீண்டும் அவனைச் சரண் அடைதல் பற்றிச் சம்பந்தர் பேசுகின்றார். இது பக்குவ நிலையில் நிகழ்வதாகும். அதனை,

''சொல்துணை வாழ்க்கை துறந்து உன்
திருவடியே அடைந்தோம்''

என்பதால் அறியலாம். வாழ்வில் வேறு துணைகளை அறவே மறந்து, உன்னையே அடைக்கலம் புகுந்தோம் என்பது இதன் கருத்து. இச்சரணாகதிக்கு முன்னே உள்ளன வாக அவர் குறிப்பிடும் வழிபாடு, சரியை, கிரியை என்ற இரண்டினுள் அடங்கும். இதன்பின் அவர் சிவயோகம் பற்றிக் கூறுகின்றார்.

சிவயோகம் என்றால் சிவனோடு ஒன்றுதல், மலர்தூவி வழிபடும்போது பக்குவ அடியார்களுக்கு யோகம் கைகூடி விடுகின்றதாம்.

''கொய்த அம்மலர் அடி கூடுவார்''[46]

அருளியலில் (Mysticism) ஒன்றும் நிலை (Unitive Way) எனக் குறிப்பிடும் நிலை இதுவே. சிவயோகத்தை எய்தி, அதன் பயனாகப் பெறுவது சிவஞானம். உண்மை நிலையை அடைவதும், பேரறிவின் சார்பில் ஆன்ம போதம் அற்று இருத்தலும், என்றும் நீங்காப் பேரின்பம் துய்த்தலுமாகிய சச்சிதானந்த அனுபவமே சிவஞானம் எனப்படும். இவற்றைப் பற்றி ஞானசம்பந்தர் கூறுவனவற்றை அருள் வாழ்வு என்னும் பிரிவில் அமைத்துக் காண்போம்.

## அருள வாழ்வு

''நம் மானம் மாற்றி நமக்கு அருளாய் நின்ற
பெம்மானை''[46அ].

என்று சம்பந்தர் பாடுவது கொண்டு, அடியார்க்கு அருள் வாழ்வு அமையும் வண்ணம் இறைவன் திருவுள்ளம் கொள்கின்றான் என அறியலாம். இங்கு மானம் என்பது மலம். மலத்தை இறைவன் உயிரினடத்திலிருந்து சிறிது சிறிதாக நீக்க நீக்க, அருள் வாழ்வுத் திறம் உயர்ந்து கொண்டே செல்லும். ஆசையும், பாசமும், கோபமும், கடமை யுணர்வும் இருந்த மனத்தில், அருள் உணர்வு இடங்கொள்ளும். எதைப் பார்த்தாலும் சிவபெருமானின் கருணையே நினைவில் எழுமானால் அதுவே அருளை உணர்தல். இதனைச் சம்பந்தர் குறியீட்டு மொழியில், 'அருள் வாழ்வு உடையோர்க்குச் சிவமும் சத்தியுமாய் நின்று இறைவன் அருள் புரிவான்' என்று கூறுகின்றார்.

''ஆணும் பெண்ணுமாய் அடியார்க்கு அருள் நல்கி''[47]

வழக்கமாகச் செய்யும் செயலே இறைவன் அருளால் செய்வது போன்ற உணர்வு உண்டாகும். இதனைச் சம்பந்தர் மகளிரின் செயலில் வைத்து,

''ஏலமலி குழலார் இசைபாடி எழுந்து

அருளால் சென்று

சோலை மலி சுனையில் குடைந்தாடித் துதி செய்ய''[48]

என மொழிகின்றார். இம் மகளிரின் செயல் பாவை நோன்பு நோற்கும் மகளிரை நினைவூட்டுகின்றது.

அருள் வாழ்வில் குறிப்பிடத்தக்க பகுதி, இறைவனின் அருள் காட்சியை, உயிர் அருள் உணர்வோடு (அருள் என்ற அடிப்படையில் நின்று) காணுதலாகும். அக்காட்சி நெடு நேரம் நிற்பது என்று கூறுகிறார் சம்பந்தர்.

''உள்குவார்கள் உள்ளத்தே

கரையா வண்ணம் கண்டான்''[49]

புறநானூறு,'' இன்னாது அம்ம இவ்வுலகம்

''இனிய காண்க இதன் இயல்பு உணர்ந்தோரே'' என்று கூறும். உலகம் துன்பம் நிறைந்தது. இதை அறிந்தோர் இன்பம் தரக் கூடியவற்றைத் தேடிக் கொள்வாராக என்பது இதன் பொருள். அருள் வாழ்வு அடைந்தோர்க்குத் துன்பமே இன்பமாக மாறும் என்கின்றார் சம்பந்தர்.

''இனிய அல்லவற்றை இனிதாக நல்கும் இறைவன்''[50]

சிவயோகத்தால் வரும் சிவானுபவத்தை 'நன்புலத் தேன்' என்பார்.[51] ஒருமுறை அல்லது சில முறை சிவானுபவம் பெற்றவுடனே வீடுபேறு கிடைத்து விடும் என்று கருதுவதற்கு இல்லை. பன்முறை அதைப் பெற்றாலும் இறைவனைத் தேடவே வேண்டும்.

''தேர்ந்தவர் தேடுவார் தேடச் செய்தே

சேர்ந்தவன்''[52].

அடியார்களின் ஆன்மீக வேட்கையைப் பெருகச் செய்ய வேண்டும் என்பதற்காகவே இறைவன் தேர்ந்தவரையும்.

அநுபூதியால், பழிஞானத்தால் இறையனுபவம் பெற்றவரை யும்- தேடச் செய்கிறான். புதிதாக இறைவனைத் தேடுபவ ரையும் சில காலம் தேடச் செய்கின்றான்.

இவ்வாறு சோதனையால் துன்பம் அளித்தும், வேதனை யில் வாடச் செய்தும், சிவபிரான் தொண்டரின் பாசத்தை முற்றும் நீக்கி, உளமார, உயிராரச் சிவானந்தத்தை அளிப் பான்.

1) ''பாசமான களைவார் பரிவார்க்கு அமுதம் அனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல் விடை மேல்
வருவார்''[53]

2) தம்மைப் போலத் தம் அடியார்க்கும் இன்பளிப்பவர்[54]

இங்குக் காட்டிய இரண்டாவது பாடற் கருத்தையே சச்சிதானந்த அனுபவம் என்று மேலே குறிப்பிட்டோம்.

பன்முறையும் இறைவனுடன் ஒன்றி நின்று, சிவானு பவம் பெற்றுப் பழுத்த மனத்தை உடைய அடியார்கள், ஆணவம், கன்மம், மாயை என்ற மும் மலங்களும், புண்ணி யம்,பாவம் என்ற வினைப்பயன்களும் மாயையால் விளைந்த குற்றமும் இன்றிச் சீவன் முத்தராக வாழ்வர். அவர்களின் தன்மையையும் சம்பந்தர் பாடுகின்றார். அவர்களுக்கு எல்லாம் சிவமாய் விளங்கும். நன்மையும் சிவமாய் விளங் கும்; தீமையும் சிவமாய் விள்ங்கும்.

''நலனொடு தீங்கும் தானலது இன்றி
நன்கெழு சிந்தையராகி
மலனொடு மாசும் இல்லவர் வாழும்
மல்கு பெருந் துறையாரே''[55]

சைவ சித்தாந்தக் கட்டளையின் தனிச் சிறப்புகளுள் ஒன்று, தத்வமசி முதலிய மகா வாக்கியங்களுக்கு அது கூறும் பொருளாகும். அவ்வகையில் **'அத்வைதம்'** என்பதற்கு அது

சிறப்புப் பொருள் காண்கின்றது. வேதங்களையும் ஆகமங்களையும் ஒருங்கு வைத்து உணர்ந்து தத்துவ விளக்கங்களைக் காண்பதற்குச் சைவ சித்தாந்த ஆசிரியர்களான சந்தான குரவர்கட்கு வழிகாட்டியவர்கள் திருமுறையாசிரியர்களே[56].

மகா வாக்கியங்களுக்கு ஏகான்ம வாதம் போல, 'பொருள் ஒன்றே' எனப் பொருள் கொள்ளாமல், விசிட்டாத் வைதத்தைப் போல், 'பொருள் இரண்டே ஆனால் அப்பொருளாகிய இறைவனுக்கு ஆன்மா சரீரம்' என்றும் பொருள் காணாமல், துவைதம் போலப் 'பொருள் இரண்டே; அவை ஒன்றுபடுதல் எக்காலமும் இல்லை' என்றும் பொருள் கொள்ளாமல், பேதா பேதம் போல், 'பொருள் ஒன்றும் ஆகும்; இரண்டும் ஆகும் என்றும் பொருள் காணாமல், இவற்றிற்கு இணைப்பாகவும் விளக்கமாகவும் சைவ சித்தாந்தம் புதுப் பொருள் கண்டது. திருமுறை ஆசிரியர்கள் அதற்கு வழி காட்டினர். திருஞான சம்பந்தர் பாடல்களுள் காணும் விளக்கங்களைக் காண்போம்:

1) ''பற்றும் ஆகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதி பார்
எற்று நீர் தீக்காலும் மேலைவிண் இயமானனோடு
மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனும் மறைகள்
முற்றுமாகி வேறும் ஆனான் மேயது முதுகுன்றே''[57]

இங்குச் சிவபரம் பொருள் ஒன்றாகியும், அதே சமயத்தில் வேறாகியும் நிற்கும் நிலை உணர்த்தப்படுகிறது. இதனையே கலப்பு, கடப்பு என்னும் இருநிலை என்று, முன்பு ஞானசம்பந்தர் பாடல்களைக் கொண்டு விளக்கியுள்ளோம். அவற்றை மீண்டும் நினைவு கூர்க. பொருள் மூன்று. அவை பதி, பாசம் என்பன. பதியாகிய இறைவன் பசுவின் மேல் கொண்ட அருளினால் படைத்தலைச் செய்கின்றான். பாசம் என்று கூறப்படுவனவாகிய ஆணவம், கன்மம்,

மாயை என்பவற்றுள் மாயை என்றும் சக்தியிலிருந்து உலகங்கள் தோன்றச் செய்கின்றான். இவ்வுலகங்களிலும், பொருள்களிலும், உயிர்களிலும் ஒன்றி - ஒன்றான நிலையில் நிற்கின்றான். இதனால் அவனது சர்வ வியாபித் தன்மை மெய்ப்பிக்கப்படுகின்றது. இதனையே வேறு வகையாக, 'இறைவன் அட்ட மூர்த்தமாகவும் உயிர்களில் ஒன்றியும் உள்ளான்' என்பர் சைவ நெறியாளர். 'அட்ட மூர்த்தி' என்ற சொல்லை ஆள்கின்றார் அப்பரடிகள்.

இறைவன் எல்லாம் ஆனான் என்றால் எல்லாம் அவனுடைய தோற்றமே எனப் பொருள் கொள்ளலாகாது என்பதற்காகவே, 'ஒன்றாகி நிற்கும் அதே சமயம் வேறாகியும் உள்ளான்' என்று கூறுகிறது சைவம், இறைவன் 'வேறாகியுள்ளான்' என்ற உண்மையைச் சம்பந்தர், அட்டமூர்த்தியைப் பாடும் பாடலை அடுத்தே மிக நயமாகக் கூறுகின்றார்.

> ''ஊழி அந்தத்தில் ஒலி கடல் ஓட்டந்து இவ்
> உலகங்களவை மூட
> ஆழி எந்தை என்று அமரர்கள் சரண்புக
> அந்தரத்து உயர்ந்தார்''[59]

பொருள் ஒன்று அன்று; இரண்டே என்பதைக் காட்டுவன இப்பாடல்கள்.

இறைவன் சடப் பொருள்களில், அவற்றின் தன்மையாய் ஒன்றி நிற்கின்றான். உயிர் அறிவுப் பொருளே ஆயினும் தானே அறியாது, உணர்த்த உணரும். அதாவது இறைவனின் திருவருள் உணர்த்த உணரும். அவ்வாறு உணர்த்தும் பொழுது, உயிர் இறைவனோடு ஒன்றாவதும் இல்லை; வேறாக நிற்பதும் இல்லை; உடனாய் நின்று உணரும். சாதாரண அநுபவம் முதல் சிவானுபவம் வரை இவ்வாறே உணரும். இதனை இறைவனது 'உடனாதல்' தன்மை எனச் சைவம் கூறும். ''உள்ளம் உருகில் உடன் ஆவர்''[60] என்று ஞானசம்பந்தர், அருள் வாழ்வு கிடைப்

பதைச் சுருக்கமாக, உடனாதல் என்ற தொடரைக் கொண்டு உணர்த்துகின்றார்.

வீடுபேறு என்பதை இறைவன் திருவடியைப் பிரியாது இருத்தலே என்று தெளிவுபடுத்துகின்றார்.

''கோயில் முது குன்றைக்
குறையாப் பனுவல் கூடிப் பாட வல்லார்கள்
பிறையார் சடை எம் பெருமான் கழல்கள்
பிரியாரே''[22]

சைவ நெறியும் மரபும் வாழப் புறச் சமயங்களை எதிர்த்தும் மக்களுக்கு நெறிவிளக்கம் செய்தும் இயக்கம் நடத்திய திருஞானசம்பந்தர் தம்முடைய பதிகங்களில் அந்த நெறியை விளக்கும் முகமாகக் கூறியுள்ள கருத்துகள் சிலவற்றை அறிந்தோம். அவர் முத்தமிழ்க் கவிஞர் ஆதலால் தத்துவ விளக்கம் போல அல்லாமல் உணர்வு பூர்வமான கவிதைகளாக அவற்றைச் சித்திரிப்பதை அறிந்து மகிழ்கின்றோம்.

## அடிக்குறிப்புகள்

1. 2 : 46 : 3
2. 2 : 46 : 10
3. 1 : 11 : 5
4. 3 : 71 : 5
5. 2 : 29 : 1
6. 1 : 111 : 1
7. 1 ; 9 : 5
8. 2 : 62 : 7
9. 1 : 4 : 4
10. 2 : 78 : 6
11. 8 : 9 : 10
12. 1 : 98 : 4
13. 2 : 4 : 1
14. 3 : 2 : 6
15. 1 : 49 : 1
16. 1 : 136 : 4
17. 3 : 35 : 4
18. 2 : 86 : 9
19. 2 : 51 : 7
20. 3 : 1 : 2
21. 3 : 92 : 4
22. 1 : 79 : 6

23. 3 : 21 : 11
24. 1 : 38 : 3
25. 1 : 48 : 1
26. 1 : 97 : 9
27. 2 : 8 : 1
28. 3 : 46 : 2
29. 1 : 8 : 1
30. 1 : 11 : 3
31. 1 : 62 : 2
32. 1 : 50 : 7
33. 1 : 50 : 1
34. 2 : 97 : 2
    2 : 86 : 7
35. 1 : 61 : 1,4
36. 3 : 53 : 9
37. திருநாவுக்கரசர் தேவா, 6 ஆம் திரு. தனித் திருத்தாண்டகம் 1 : 10
38. 2 : 64 : 3
39. 2 : 61 : 6
40. 3 : 106 : 1
41. 2 : 41 : 7
42. 1 : 96 : 5
43. 1 : 75 : 3
44. சேந்தனார் திருப் பல்லாண்டு : 12
45. 3 : 22 : 2
46. 1 : 113 : 4
46. அ. 2 : 11 : 2
47. 1 : 84 : 5
48. 1 : 104 : 2
49. 2 : 61 : 4
50. 2 : 83 : 5
51. 3 : 22 : 3
52. 1 : 113 : 5
53. 2 : 80 : 7
54. 2 : 102 : 2
55. 1 : 42 : 4
56. 1) Tirujnanasambandhar, Introduction by K. Sivaraman vani Patihppakam, Madras. Page 10
    2) முரு. பழ. இரத்தினம் செட்டியார், திருவாசகச் சுவை அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1988. பக்கம் 3-6
57. 1 : 53 : 2
58. 1) திருநாவுக்கரசர் தேவராம் : 6 ஆம் திருமுறை: நின்ற திருத்தாண்டகம் : 1
    2) மணிமேகலை காதை எண் : 27 : வரிகள் 86-94
59. 2 : 102 : 5, 6
60. 2 : 111 : 3
61. 2 : 64 : 11

# 6

## மறை அடிப்படை

திருஞான சம்பந்தர் தேவாரத்தின் தமிழ் மரபு அடிப் படையை முன் இயல்களில் கண்டோம். இவ்வியலில் அவற் றுள் வேதங்களின் அடிப்படை எவ்வாறு அமைந்துள்ளது எனக் காண்போம்.

குமரகுருபரர் சைவ நெறியை, ''ஒரும் வேதாந்தம் என்ற உச்சியில் பழுத்த ஆரா இன்ப அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவசித்தாந்தம்'' என்று போற்றுவர்.[1] வேதம் என்ற மரத்தின் உச்சியாக உள்ளவை உபநிடதங்கள் அவை வேதங்களின் முடிபொருளை ஆராயும் இயல்புடை யவை ஆதலால் அவற்றை வேதாந்தம் என்பர். அதில் பழுத்த கனியாகும் சைவ சித்தாந்தம் என்பது அவர் கருத்து. உபநிடதங்களை வேதங்களின் ஞானகாண்டம் என்றும், அவற்றினின்று எழுந்த தத்துவ ஆராய்ச்சியை உத்தர மீமாஞ்சை என்றும் கூறுவர். எனவே ஞான காண்டத்தின் சாரம் சைவசித்தாந்தமாக வடிவம் கொண்டது என்பது குமரகுருபரர் கருத்து. தாயுமானவர், ''ராசாங்கத்து அமர்ந்த வைதிக சைவம் அழகிது''[2] என்றார். சைவ நெறிக்கு ஆணை நூலான முதனூல்கள் வேதங்களும் சிவாக மங்களும் என்பர். இச்சான்றுகளைக் கொண்டு சைவநெறி வேதநெறி என்று அறியலாம். சேக்கிழார் 'வேதநெறி தழைத்

தோங்க, மிகுசைவத் துறை விளங்க' என, வேதம் அடிப் படைநெறி, சைவம் அதன் பலதுறைகளுள் சிறந்தது என்னும் கருத்துப்பட மொழிகின்றார்.

வேதங்கள் நான்கு, இருக்கு, யசுர், சாமம் அதர்வணம் என, அவற்றை வியாசர் தொகுத்தார். அவரது இயற்பெயர் வாதராயணர் என்பர். தொகுத்த போதே, ஒவ்வொரு வேதத்திலும், மந்திரங்கள், பிராமணங்கள், ஆரணியகங்கள் உபநிடதங்கள் என்னும் நான்கு பகுதிகள் உளவாகுமாறு தொகுத்தார். அவ்வாறு தொகுத்தாலும், வேதங்களை இரண்டு காண்டங்களாகப் பிரித்து எண்ணும் முறை தோன்றியது. அதன்படி முற்பட்ட காண்டமாகிய கர்ம காண்டத்தினுள் மந்திரம், பிராமணம் ஆகிய பகுதிகளும் பிற்காண்டமாகிய ஞான காண்டத்துள் ஆரணியகங்களும் உபநிடதங்களும் அடங்கும்.

கர்ம காண்டத்துள் அக்கினி, இந்திரன், வருணன் முதலிய பல தெய்வங்களும், அவர்களை வழிபடும் யாகங் களும், அவற்றுக்குரிய மந்திரங்களும் கூறப்படுகின்றன. "வேதத்தில் அமைந்த வழிபாடுகள் யாவும் அக்கினி மூல மாக ஆகுதிகளைத் தேவர்களுக்குக் கொடுக்கும் யக்ஞம் அல்லது யாகம் என்கிற வேள்விகளையே முதன்மையாகக் கொண்டவை. வேள்விகள் பலவும் தனிப்பட்டவர்கள் நலம் கருதியும், பொதுவாக உலக நலம் கருதியும் செய்யப்படும். இவைகளால் வேதத்தின் பூர்வபாகம் பொதுவாகத் தெய்வ உணர்ச்சியையும், சுவர்க்கம், நரகம், மறுபிறப்பு என்னும் இவைகளை உள்ளன எனத் தெளிந்துகொள்ளும் கொள்கை களையும் தரும்"[2]

ஞானகாண்டமானது, கர்ம காண்டத்துள் சொல்லப் பட்ட தெய்வங்கள் யாவைக்கும் மேலான ஒரு பரம்பொருள் உண்டு என்று நிறுவுகின்றது. தெய்வங்கள் யாவும் பரம் பொருளின் குறிப்பின் வழி நடப்பவையே என்றும், அப்பரம் பொருளை உணர்தலே ஞானம் என்றும், அதனை உணராத

வரையில் பிறவிவருவது நிற்காது என்றும் அதனை உணர்ந்து அதனோடு ஒன்றுபடுதலே பிறப்பு நீங்கி வீடு பெறுதலாம் என்றும் கூறும். இக்காண்டம், அக்கினி முதலிய நாமங்கள் மகாருத்திர ஆகிய சிவபிரானது நாமங்களாம் என்றும், சிவபிரானே பரம்பொருள் என்றும், எல்லாத் தேவர்களுக்கும் முற்பட்டவர் என்றும் கூறும்.[3அ]

க. வச்சிரவேலு முதலியார் ''பன்னெடுங்காலமாக நமது நாட்டில் சேர்ந்த அறிவுக் களஞ்சியமே வேதம் என்பார். முனிவர், அருளாளர், இருடிகள் ஆகியோர் தமது இறையுணர்வு நிலையில் பெற்ற அனுபவத்தை வேதத்தில் பொதிந்து வைத்துள்ளனர் என்றும் அவர் கூறுவார்.[3ஆ]

வேதம் சிவபிரான் மொழிந்தது என்று திருமூலர் கூறுவார். ஆகமமும் சிவபிரான் மொழிந்ததே என்பார். இக் கருத்தோடு வச்சிரவேல் முதலியார் கூறும் கருத்து மாறுபடுகிறதே எனின், வேதம் மாந்தரின் உள்ளிருந்து இறைவன் உணர்த்தியதாகக் கொள்ளப்படுதலால் இறைவன் மொழிந்தது என்று கொள்ளப்படும். இறைவனின் உரை மாந்தர் மூலமாக வெளிப்பட்டது. (Revelation)

வேதமோடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள்ளன
நாதன் உரையவை; நாடில் இரண்டந்தம்
பேதமது என்பர் பெரியோர்க்கு அபேதமே.

என்பது திருமந்திரம்.[4] இதிலிருந்து ஓர் உண்மையை ஊகித்து அறியலாம். வேதாந்தம், ஆகமாந்தம் என்பவை இரு வேறு சிந்தனை முறைகள். அவ்விரண்டும் பெரிதும் வேறுபட்டவை. ஆயினும் இவற்றின் இடையே ஒற்றுமை காணப் பெரியோர் முயன்றுள்ளனர். பரம்பொருள் ஒருமை என்ற சாரத்தை மட்டும் கருத்தில் கொண்டு, அந்த ஒருமை முடிவிற்கு அவ்விரண்டும் வருவதால், அவை பேதமற்றவை என்று கூறினர் என்பதே அது.

சைவ நெறி ஆகமங்களுடனேதான் நேர் தொடர்பு உடையது. ஆகமம் வகுக்கும் வழிபாடான சரியை, கிரியை யோகம், ஞானம் என்பவற்றையே பின்பற்றுகின்றது. வேதம் வகுக்கும்- சிறப்பாகக் கரும காண்டம் வகுக்கும் வேள்வி முறைகள் அல்ல. ஆனால் வேதாந்தம் என்ற சாரத்தைப் பொறுத்த வரையில், உபநிடதங்களுக்கும், ஆகமத்தின் ஞான பாதத்திற்கும் மிக்க ஒற்றுமை உண்டு.

சுப்ரபேத ஆகமம், "சித்தாந்த வேத சாரத்வாத்" என்று கூறும் வாக்கியத்தை இராமானுசாச்சாரி எடுத்துக் காட்டி, சித்தாந்தம் வேதத்தின் சாரம் என்பர். சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் பலவற்றைப் பாடிய உமாபதி சிவாச்சாரியார்,

வேதம் பசு அதன் பால் மெய்யாகமம் நால்வர்
ஓதும் தமிழ் அதனின் உள்ளுறு நெய்-போதமிரு
நெய்யின் உறுசுவையாம் நீர் வெண்ணெய்
மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் திறம்.

என்று கூறுவார்.

சைவநெறி வேத நெறியிலிருந்து தோன்றியது அன்று. வரலாற்றின்படி தமிழ் மக்கள் தோற்றுவித்த வளர்த்த நெறி இது. சைவ சமயம் சிந்துவெளி நாகரிக காலத்தில் இருந்தது என்பது தெளிவு. அந்த நாகரிகம் இந்தியாவில் ஆரிய நாகரிகத்திற்கு முற்பட்டது என்பதை மிகப்பல வரலாற்று அறிஞர்கள் ஒப்புவர். அது திராவிட நாகரிகம் என்றே ஈராஸ் பாதிரியார் ஆய்ந்துரைத்துள்ளார். வேதங்களின் முடி பொருள் பற்றிய உரையாடலாக உபநிடதங்கள் தோன்றிய காலங்களில் சைவநெறிக்கும் வேதத்திற்கும் கருத்துப் பரிமாற்றங்கள் நிகழ்ந்திருக்கவேண்டும். இரண்டும் இதனால் வளம் பெற்றிருக்கவேண்டும். ஆதலால் சைவநெறியில் வேதத்தின் அடிப்படைகள், மிக முக்கியமான கொள்கை களை வகுக்கும் அளவில் இடம் பெற்றன.

இவ்வியலில், திருஞானசம்பந்தர் வேதங்களைப் பற்றிக் கூறும் குறிப்புகளையும், சைவநெறி விளக்கமாகக் கூறும் செய்திகளையும், வேதம், உபநிடதம், புராணம் ஆகிய நூல்களின் செய்திகளையும் ஒப்பு நோக்கி, மறையின் அடிப்படை எந்த அளவிற்குச் சம்பந்தரது தேவாரத்திலும் சைவ நெறியிலும் இடம்பெற்றுள்ளது என்பதைக் காண்போம். இவ்வொப்பாய்விற்குக் காசிவாசி செந்திநாதையர் எழுதியுள்ள 'தேவாரம் வேதசாரம்' என்ற நூல் பெரிதும் உதவியது. ஒப்புமைப் பகுதிகளும், வடமொழி மூலங்களின் மொழி பெயர்ப்பும் அவர் தந்துள்ளவையே ஆகும்.

முதலில் ஞானசம்பந்தர் வேதம், வேதாந்தம் எனப் படும் உபநிடதங்கள் ஆகியவை பற்றிக் கூறும் குறிப்புகளைக் காண்போம். வேதங்களும் வேதாங்கங்களும் சிவபிரான் கூறியவை என்று மொழிகின்றார்.[4]அ மற்றும், 'தொகுத்தவன் அருமறை, அங்கம் ஆகமம் வகுத்தவன்' என்று கூறுகின்றார்.[5] வேதங்களில் உள்ள மந்திரம், வேள்வி, அவற்றின் ஞான காண்டத்தில் உள்ள ஆன்மீக அறிவுப் பகுதிகள் முதலியவற்றை எல்லாம் மாந்தருள் சிறந்தவர்களின் மெய்யுணர்வில் இறைவன் நின்று உணர்த்த அவர்கள் கூற்றாக அவை வெளிப்பட்டன. என்ற செய்தியில் சைவ நெறி உண்மை ஒன்று இருக்கிறது. அது, இறைவன் உயிருக்கு உயிராக நின்று உடனாக நின்று உணர்த்தினால்தான் உயிர் உணரும் என்பது. கர்ம காண்டத்தோடு ஞான காண்டத்தையும் இணைத்துத் தொகுத்துள்ள காரணத்தால், ஞான காண்டம் தரும் விளக்கத்தைக் கொண்டு, கர்ம காண்டத்தை நோக்க வேண்டும் என்ற கருத்துக் குறிப்பாகப் புலப் படுமாறு, அவ்வாறு தொகுக்குமாறு அருள் செய்தவன் சிவபிரானே என்று கூறுகின்றார்.

''இருக்கு வேதம், யசுர்வேதம், சாமவேதம் (முதலிய) இந்தப் பரம் பொருளின் சுவாசம்'' என்று பிரகதாரணியோபநிடதமும, சகல வித்தைகளுக்கும் கர்த்தா ஈசானர் என்று தைத்திரீய ஆரணியகமும் கூறுகின்றன.

மந்திரம் என்று சொல்லப்படும் வேதத்திற்கும் தந்திரம் எனப்படும் ஆகமத்திற்கும் சிவபிரானே உரிமை உடையவன் என்று சம்பந்தர் கூறுகின்றார்.[6] வழியே முடிவைப் பயக்கும் என்ற உண்மைப்படி, வேதநெறியாகிய வழியே, முடிவாகிய சிவபெருமானை அடையச் செய்யும் ஆதலின், ''நான்கு வேதமும் ஆனவன் சிவபெருமானே'' என்கின்றார்.

சிவபிரானை வீணை ஏந்தி மறைப்பாடல்களைப் பண்ணியல்போடு பாடுகின்றான் என்று கூறுகின்றார். வேதங்கள் எண்ணிய பயனைத் தருதல் உறுதி என்பார் பொய்யா மறை என்று போற்றுகின்றார். வேதங்களால் கூறப்படும் முடிவான பொருள் சிவபெருமானே என்று கூறுகின்றார்.[7] இதே கருத்தில், ''மாமறை நான்கும் தம் பாட்டு என்பர்... புரிசடையார்க்கே'' எனக் கூறுவார். வேதங்களில் ஆழ்ந்து கிடக்கும் பொருள் நலத்தில் சிவபிரானைப் பற்றிய அருங் கருத்துக்கள் உள்ளன என்பார், ''மறைகள் வேதம் விரித்து ஓதுவார் கண் உளார்'' என்று மொழிவார். கண் என்பது ஈண்டு அறிவு.

மற்றும் வேதம் நான்கினாலும் உணர்த்தப்படும் வீடு பேற்றை தருபவன் சிவபெருமானே என்று கூறுகின்றார்.[8] வேதாந்தம் எனப்படும் உபநிடதங்களே வீடு பேறு பற்றிப் பேசுகின்றன.

''வேதாந்தம் பன்னு நன் பொருள் பயந்தவர்''[9]

என்பது சம்பந்தர் வாக்கு.

அடுத்து வேதங்கள், வேதாந்தமாகிய உபநிடதங்கள் ஆகியவற்றுடன் சம்பந்தர் கருத்து ஒற்றுமைப்பட வரும் இடங்கள் சிலவற்றை நோக்குவோம்.

1) இருக்கு வேதம், ''தேவர்கள் உலக சிருஷ்டிக்குப் பின்னர்தான் உளராயினார்கள். அங்ஙனமாயின் அது எங்கிருந்து உளதாயிற்று'' என்று வினவி, ''பரமவியோமத்தின்

கண்ணே எவர் பிரபஞ்சத்திற்கு அத்யட்சராய் நின்றாரோ, அவரே அதனை அறிவார், மற்றெவரும் அறியார்'' என்று உத்தரம் இறுத்தது.

பிரகதாரணிய உபநிடதம், ''எது இதயத்துள் ஆகாய மாய் இருக்கின்றதோ, அதில், அனைத்தையும் வசீகரிப்ப வரும் அனைத்திற்கும் அதிபதியும் அனைத்துக்கும் ஈசானரும் ஆயினார் அமர்ந்திருக்கின்றார்'' என்று கூறும்.

காரண ஆகமம், ''பஞ்ச மந்திரான் மக ஈசானரைத் தாண்டவேசுவரர் என்றும், பிரமாந்திரத்திலே சிவன் உளராயினார் என்றும் அறிக. அவர்க்கு மேல் உள்ள (சமஷ்டி ரூம சதாசிவ) தாண்டவேதவரைத் தியானிக்க அவர் நேரே தேவதேவரும் ஜகத்குருவும் ஆகிய ஆனந்த தாண்டவேசு வரராம்'' என்று கூறுகின்றது ஆகவே இருக்கு வேதத்தில் கூறப்பட்ட பரமாகாயத்து அத்யட்சர் சமஷ்டி ரூப சதாசிவ தாண்டவேதவரராம் என்க. இக்கருத்தோடு சம்பந்தரின்,

''இன்ன உரு இன்ன நிறம் என்று அறிவதேல் அரிது நீதி பலவும்
தன்ன உருவாம் என மிகுத்தவன்'' 11

என்னும் பாடல் அடிகள் ஒப்பு நோக்கற் பாலன.

2) ''மகாபிரளய காலத்திலே அசத்தும் இல்லை; சத்தும் இல்லை. அந்த ஒன்று இருந்தது. அதினின்று முதற் கண்ணே காமம் எனப்படும் பராசக்தி உளதாயிற்று''

என்று இருக்கு வேதமும்,

''எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றி, சத்துமின்றி, அசத்தும் இன்றி இருந்ததோ அப்போது சிவன் ஒருவரே இருந்தார். அந்தச் சிவ சூரியனுடைய அந்த அழி யாத முக்கியப் பொருளாகிய பிரக்ஞை எனப்படும் பழைய பராசக்தி உதித்தார்''

என்று சுவேதாசுவரமும் கூறும். இவற்றோடு சம்பந்தரின்,

''இருநிலனது புனலிடை மடிகர எரிபுக எரியது மிகு
பெருவளியினிலவிதர வளிகெட வியனிடை
முழுவதுகெட
இருவர்கள் உடல் பொறை யொடு திரி எழில்
உரு உடையவன்''[12]

என்ற பாடலடிகளை ஒப்பு நோக்கலாம். ஐம்பூதங்களும் ஒன்றில் ஒன்று ஒடுங்க, இறுதி பூதமாகிய ஆகாயமும் அழிய, பிரமன், திருமால் என்னும் இருவர்களுடைய இறந்த உடல்களையும் தூக்கிக் கொண்டு ஆடும் அழகியோன் என்பது இதன் பொருள்.

மகாசங்காரம் செய்பவன் எவனோ அவனே பதி. அவனே மீண்டும் உலகங்களைப் படைக்கின்றான் என்பது சைவ நெறியில் இறைக் கொள்கை.

3) ''எவர் பகவானாகிய உருத்திரரோ, எவர் பிரமாவோ, எவர் பூப்புவர் அவரோ அவர்க்கு நமஸ்காரம்; எவர் விஷ்ணுவோ, மகேசுவரரோ அவருக்கு நமஸ்காரம்'' என்று அதரவசிரோபநிடதம் கூறுகின்றது. இதனுடன் சம்பந்தரின்,

''மலரோ செங்கண் மால் ஈசன் என்னும்
மூவராய முதல் ஒருவன்''[13]

என்னும் பாடலடிகளை ஒப்பிடுக,

4) சுவேதாசுவதர உபநிடதம், ''பிரபஞ்சத்திற்குக் காரணப் பிரமம் யாது? எங்கிருந்து பிறந்தோம் எவரால் நிலையுறுகின்றோம் எவரிலே இயலமுறுகின்றோம்? எவரால் இன்பத்திலும் இதரமாகிய துன்பத்தினும் அதிஷ்டிக்கப்பட்டோம்? எவரால் பந்த நிவிருத்தியாகிய அனுக்கிரக நிலை எய்துகின்றது?'' என்று வினாவும்.

''எதினின்று இந்த செந்துக்கள் எல்லாம் பிறக்கின் றனவோ, பிறந்தவை எதனால் நிலையுறுகின்றனவோ, ஒழியுங்காலத்து அவை எதனுட் பிரவேசிக்கின்றனவோ அதனை அறிதி, அது பிரஹ்மம்'' என்று தைத்திரியோ பநிடதம் கூறும்.

இவற்றோடு ஞானசம்பந்தர் கூறும், ''படைப்பு, நிலை, இறுதிப்பயன்.........பல்கணம் உடையான்''[14] என்ற பாடலடியை ஒப்பு நோக்குக. ''விண்முதல் பூதலம் ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும் படைத்து அளித்து அழிப்ப மும் மூர்த்திகள் ஆயினை''[15] என்ற பாடலடிகளும் ஒப்புக்காண்க.

5) திருஞானசம்பந்தர் தமது முதற்பதிகத்தைத் ''தோடுடைய செவியன்'' எனத் தொடங்கினார், பிரண வத்தின் முதல் அட்சரமாகிய ஓகாரத்தை காயத்திரி மந்திரத்தின் முதல் அட்சரமாகிய தகரத்தின் மீது வைத்துத் 'தோடுடைய' என்றார் என்பர்.

6) யசுர்வேதம், 'நமசிவாய ச சிவதராய ச என்று கூறும் ''ச்ர்வலிங்காய நம: சிவாய நம: சிவலிங்காய நம:'' என்று தைத்திரீய ஆரணியகம் கூறும், இவை முறையே தூல பஞ்சாக்கரமும் சூக்கும் பஞ்சாக்கரமும் ஆகும்.

பஞ்சாக்கரம் சொப்பவர் எய்தும் பயன்களைச் சிவ புராண தருமசங்கிதை, வாயுசங்கிதை முதலியவை கூறும். ஞானசம்பந்தர் பஞ்சாக்கரப்பதிகம் ஒன்றும், நமசிவாயப் பதிகம் ஒன்றும் பாடியுள்ளார். பின்னதில், பஞ்சாக்கரம் 'வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது' என்பார். மற்றும் ''நண்பால் சிவயா எவனா நாலூர் மயானத்தே இன்பாயிருந்தானை ஏத்துவார்க்கு இன்பமே'' என்பார்.[16]

7) ''எந்த உருத்திரர் சூரியனை ஒத்த ஒளியினராயப் பொற் பிரகாசத்தினராயுள்ளார்'' என்று இருக்குவேதமும் ''கொற்கையினர்க்கு பொன்வண்ணருக்கு, பொன்ரூபர்க்கு,

பொற்பதிக்கு நமஸ்காரம்'' என்று தைத்திரீய ஆரணியகமும் கூறுகின்றன.

ஞானசம்பந்தரும் சிவபிரானை, ''பொன் ஏர்தருமேனி யனே'' என்று ஏத்துவார்

8) ''இவர் பெண் அல்லர்; ஆண் அல்லர்; இவர்நபும் சகர் அல்லர்'' என்று சுவேதாசிவதர உபநிடதம் கூறும். இதனை வேறுவகையாக ஞானசம்பந்தர், ''பெண் ஆண் அலியாகும் பித்தா'' என்று கூறுவார்.

9) ''அதனை அறிஞர் ஜோதிக்குள்ளே ஜோதி என் னும் அமிர்தமாகிய ஆயுசு என்றும் உபாசிக்கின்றனர்'' என்று பிரகதாரணியேய நிடதம் கூறுகின்றது. அதனை ஞானசம்பந்தர், ''ஓதி யாரும் அறிவாரிலை ஓதிலைகெலாம் சோதியாய நிறைந்தான் சோதியுட் சோதியான்'' எனப் பாடுகின்றார்.[17]

10) ''நிரஞ்சனாய் ஆன்மா பரம சாமியத்தை அடை கிறான்'' என்று முண்டகோபநிடதமும், ''சாதிக்கற்பாலது சிவசாமியம்'' என்று வாயு சங்கிதையும் கூறும். இதனை ஞானசம்பந்தர் கூறும், ''சேர்வார் தாமே தானாகச் செயு மவன்''[18] என்று கூறுவதுடன் ஒப்பு நோக்கலாம்.

11) ''சிவபெருமானை அறிந்து சமஸ்த பாசங்களி னின்றும் வீடுறுகின்றான்'' என்று சுவேதாசுவரோபநிடதம் கூறும். இதனைச் சம்பந்தர், 'பாசவல்வினை தீர்த்த பண் பினன்'' என்றும் ''பாசமான களைவார்பரிவார்க்கு அமுதம் அனையார்'' எனறும் ''ஊனத்து இருள் நீங்கிட வேண்டின் ஞானப்பொருள் கொண்டு அடிபேணும்'' என்றும் பாடு கின்றார்.

இதுவரை காட்டியவற்றால் வேதங்கள் கூறும் கருத்து கள் பலவும் உபநிடதங்கள் சொல்லும் வேதாந்த உண்மை களும் திருஞானசம்பந்தரின் தேவாரத்தில், சைவநெறியின்

அடிப்படை உண்மைகளாக இடம் பெறுவதைக் கண்டோம். இவை தவிர சிவபிரானின் பரத்துவத்தை (பரம் பொருள் தன்மையை) நிலை நாட்டும் புராண வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றைப் பெரும்பாலான பதிகங்களில் எடுத்துக் கூறுகின்றார். அவை முன்னிலைப் பரவலாகச் சிவபிரானைப் புகழ்ந்து ஏத்துவதற்குப் பயன்படுகின்றன. தோத்திரம் என வடமொழியில் சொல்லப்படும் சொல்லுக்கும் முன்னிலையாகவும் படர்க்கையாகவும் வைத்துப் புகழ்ந்து ஏத்துதல் என்பதே பொருள்.

அவ்வாறு ஞானசம்பந்தரால் மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறப்படும் புராண வரலாறுகள் திரிபுரம் எரித்தமை, பிரமன் தலைகளுள் ஒன்றைக் கிள்ளி, அத்தலையோட்டில் தாருகவனத்து முனிவர் பத்தினியரிடம் பிச்சையேற்றமை, மன்மதனை எரித்தமை, கங்கையைச் சடையில் சூடியமை, பாற்கடல் கடைந்த காலத்தில் எழுந்த ஆலகால நஞ்சை உண்டு நீலகண்டராயினமை, பிறையைத் தலையில் சூடியமை, சுடுகாட்டில் பேய்கள் பாட நடமாடியமை, அருச்சுனனுக்குப் பாசுபதம் கொடுத்தமை, தாருகவனத்து முனிவர்கள் தன்னை அழிப்பதற்கு ஏவிய யானையைச் சிவபிரான் கொன்று, அதன் தோலைப் போர்வையாகக் கொன்றமை, தக்கன் செய்த யாகத்தில் கலந்துகொண்ட தேவர்களைத் தண்டித்து, அந்த யாகத்தைஅழித்தமை முதலியவையாகும். அவர் பதிகம் தோறும் கூறும் புராண வரலாறுகள் இரண்டு. ஒன்று பிரமனும், திருமாலும் சிவபிரானது திருவடியையும் முடியையும் தேட, அவர்கள் காண இயலாதவனாக நின்றமை. மற்றொன்று இராவணன் கைலை மலையைத் தூக்க முயன்றபோது, சிவபிரான் அவனது தலைகளைத் தனது கால்விரல் ஒன்றால் நெரித்து, பிறகு அவன் இசை பாடிப் போற்றியமையால் மன்னித்து அருள் செய்து, வாளும் நாளும் கொடுத்தமை. இதனை முன்பு எடுத்துக் காட்டி, இதற்குரிய காரணம் யாதாக இருக்கலாம் என்றும் கருத்துத் தெரிவித்தோம்.

மற்றும், புராண வரலாறுகள் தத்துவங்களை விளக்கும் குறியீடாக அமைபவை. யாரும் மக்களுக்குச் சிவபெருமானு டைய தலைமையை-பரத்துவத்தை-எடுத்துக் காட்டி, அவ னுடைய பெருமையை உள்ளங்கை நெல்லி எனக்காட்டும் கதைகளை எடுத்துக் கூறுவதன் வாயிலாகவே, இயக்க முறையில் சைலம்பரப்பும் நெறி எனக் கொண்டு, அதற்கு வேதம், உபநிடதம், புராணம், இதிகாசம் என்ற பரவிய வழக்கு உடைய நூல்களிலிருந்து செய்திகளை எடுத்துக் கூறினார் ஞானசம்பந்தர்.

மக்களிடம் பரவியிருந்த சமண சமயமும் பௌத்த சமயமும் வேதத்தை எதிர்த்து, அறநெறி ஒன்றே வாழ்க்கை யில் நன்மை எய்தற்கும் வீடுபேறு அடைவதற்கும் வழி என்று கூறியும் இறைக் கொள்கை ஒன்றும் கொள்ளாமலும் இருந்தமையால், பாரத நாடு முழுவதும் ஆங்காங்குப் பரவி யிருந்த இம் மதங்களை, இறை நெறிகளின் பொதுவான சமய, தத்துவ, புராண அடிப்படையைப் பின்னணியாகக் கொண்டு எதிர்க்க வேண்டுவதன் இன்றியமையாமையை உளங் கொண்டே ஞானசம்பந்தர் மறையடிப்படையை தமது இயக்கத்திற்கும் இலக்கியத்திற்கும் தலைமைக் கூறுபாடு களுள் ஒன்றாகக் கொண்டார்.

இதனை அவர் மதுரையில் சமண முனிவர்களுடன் சமய வாதம் செய்ய முற்பட்ட பொழுது,

''வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதமல்லி யமணொடு தேரரை
வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுடனாய பரமனே
ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆல வாயில் உறையும் எம் ஆதியே''[19]

என்று பாடுவதிலிருந்து அறியலாம். நாடு முழுவதும் சைவ நெறி பரவ வேண்டும் என்ற தமது உள் வேட் கையை இப்பதிகத்தில் நன்கு குறிப்பிடுகின்றார்.

## அடிக் குறிப்புகள்

1. பண்டார மும்மணிக் கோவை : 11 : அடிகள் 32- 36
2. தாயுமானவர் பாடல்
3. சித்தாந்தத் தெளிவியல், சி. அருணை வடிவேல் முதலியார், தருமை ஆதீனம், 1974. பக்கம் 2
3 அ. தேவாரம் வேதசாரம், காசிவாசி செந்தி நாதையார், சிறப்புப் பாயிரம், பக்கம் 4-5
3 ஆ. Lectures on Saiva Siddhanta Lecture No. 5. Annamalai University, 1965 Page 1.
4. திருமந்திரம் : 8 ஆம் தந்திரம் : 28
4 அ. 1 : 100 : 2
5. 3 : 23 : 6
6. 1 : 61 : 3
7. 3 : 12 : 1
8. 2 : 59 : 5
9. 2 : 102 : 1
10. 3 : 28 : 3
11. 3 : 71 : 4
12. 1 : 22 : 7
13. 1 : 53 : 1
14. 1 : 9 : 2
15. 1 : 128
16. 2 : 46 : 9
17. 2 : 6 : 7
18. 1 : 126 : 7
19. 3 : 108 : 1

7

# ஆகம அடிப்படை

சைவ நெறிக்குச் சிவாகமங்களும் வேதமே போல முதநூல் ஆகும். அவை 28 என்றும் உபாகமங்கள் 207 என்றும் கூறுவர். சிவாகமம் இருபத்தெட்டும் வருமாறு:-

காமிகம், யோகசம், சிந்தியம், காரணம்,
அசிதம், தீப்தம், சூட்சுமம், சகஸ்ராகம்,
அம்சுமான், சுப்ரபம், விசயம், விசுவாசம்,
சுவயம்புவர், அக்கினேயகம், பத்திரம்,
ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஹாசம்,
முகயும் பிகம், உத்கீதம், லலிதம், சித்தம்,
சந்தானம், நாரசிம்மம், பரமேசுவரம்,
கிரணம், பரம் என்பவை.

சிவஞான முனிவர் தாம் எழுதிய மாபாடியத்தில் பவுட்கரம், மிருகேந்திரம், சர்வஞ்ஞானோத்தரம், மதங்கம் என்னும் ஆகமங்களைக் குறிப்பிட்டுள்ளார். அவர் மேலும், 28 சிவாகமங்களும் சிவபெருமானால், பிரணவர், மகாருத்திரர் முதலிய இருபத்தெண்மருக்கு உபதேசிக்கப்பட்டன என்று கூறுகின்றார்.

ஆகமங்கள் வடமொழியில் இயற்றப்பட்டன. 'அவை முதலில் தமிழ் மொழியில் தோன்றின; பிறகு தமிழறிஞராலேயே வடமொழியில் பெயர்க்கப்பட்டன' என்று சில

அறிஞர் கொள்வர்.[1] ஆகமம் என்னும் வடசொல்லுக்கு மூன்று வகையில் பொருள் கூறப்பட்டுள்ளது.

(1) இறைவனிடத்திலிருந்து தோன்றியது.
(2) பதி, பசு, பாசம் பற்றிய நூல்.
(3) சிவஞானத்தால் மலத்தை நீக்கி வீடுபேறு அடைவிப்பது.

சைவ நெறியைப் பொறுத்த வரை, வேதங்கள் பொது நூல் என்றும், ஆகமங்கள் சிறப்பு நூல் எனவும் கொள்வர். ''வேதம் உலகியலில் வாழ்வோர்க்கு உரியது; ஆகமம் சத்தி நிபாதர்க்கு உரியது'' என்பர்.[2] சத்திநிபாதம் என்பது இறைவனது திருவருள் ஆன்மாவில் பதிதல். இறையியல் உண்மைகள் வேதங்களிலும் கூறப் பட்டிருப்பினும், அவை பல படி நிலையினருக்கும் பொதுவாக இருத்தலின், ஞான நெறியாக அவைகூறும் உண்மைகள் இவை என்று வகுத்துக் கூற இயலாது. ஆகமங்கள் சிவபெருமானே கடவுள் எனத் துணிந்து, அவரை வழிபடும் சமய நெறியையும் தத்துவநெறியையும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பிரிவுகளில் கூறும் என அறிகின்றோம்.

சரியை திருக்கோயில் தொண்டு. அதில் தொடங்கி வளர்ந்து வருவனவே கிரியை, யோகம், ஞானம் என்னும் படி நிலைகள். எனவே சரியை, கிரியைஎன்பனவற்றைஆகமநெறியின் மையம் எனக் கொள்ளலாம். முன் இயலில் திருஞான சம்பந்தர் திருத்தொண்டு நெறியைப் பரப்பினார் என்றும் அந்த நெறியின் மையம் திருக்கோயில் வழிபாடே என்றும் எடுத்துக் காட்டினோம். கிரியை என்பது வழிபாட்டு முறை. இப்பிரிவில், திருக்கோயிலுக்கு அடித்தளம் அமைத்தல் முதல் வெவ்வேறு வழிபாட்டுச் சடங்குகள், மந்திரங்கள். திருமேனி நிறுவுதல் (விக்ரகப் பிரதிட்டை) கோயில் கட்டிட முறை, விமான அமைப்பு வகை, இறைவன் இறைவி திருவுருவ அமைப்பு, அவர்களின் அணிகள், ஆடைகள், ஆயுதங்கள் முதலியவை கூறப்படுவதாக அறிகின்றோம். யோகம், சிவ

யோகம் என்ற பெயரால் அஷ்டாங்க யோகத்திலிருந்து வேறுபட்டதாக, விளக்கப்படுகின்றது. ஞானம் என்பது இரண்டற்ற நிலையில் சிவானுபவம் பெறுதல்.

பி. டி. சீனிவாச ஐயங்கார் 'இந்தியத் தத்துவ ஞானம் (Outeines of Indian Philosophy)' என்னும் நூலில், 'வேதங்கள் இந்துக்களால் சனாதனம் (என்றும் உள்ளவை) என மதிக்கப்பட்டாலும், பரம் பொருள் பற்றிய உரையாடல்களில் உபநிடதங்கள் சிறந்தவை எனக் கொண்டாலும், அவர்கள் வாழ்வின் நோக்கு, பழக்க வழக்கம் ஆகியவை ஆகமத்திலிருந்தே பெறப்பட்டன என்றும், இந்திய வாழ்க்கை முறையில் ஆகமங்களின் செல்வாக்கு ஆழமானது என்றும் எழுதுகின்றார்.[3]

டி. எஸ். கந்தசாமி முதலியார், "ஆகமங்கள் வேதம் விதிக்கும் வழிபாட்டு முறையினின்று வேறுபடுகின்றன. இறைவன் திருவுருவ வழிபாட்டை-இலிங்க வழிபாடு உட்பட அவை விரித்துரைக்கின்றன. அவை தரும் ஆன்மீக ஞானம் மிகச் சிறந்தது" என்று குறிப்பிடுகின்றார்.[4]

ஆயினும் ஆகமங்கள் பற்றிய செய்தி இன்றைய மேலை, கீழை நாட்டுத் தத்துவக் கல்வியாளர்களால் அறியப்படவில்லை என்றே கூறலாம். மேலே குறிப்பிட்டவற்றின் பொருளுக்கு ஏற்பச் சர்வஞ்ஞானோத்தரம் முதலியவற்றிற்குப் பொருள் கொள்ளாது, சர்வஞ்ஞானோத்தரம் முதலியவற்றின் பொருளுக்கு ஏற்பப் பவுட்கரம் முதலியவற்றிற்குப் பொருள் கொள்வர் என்று எழுதுகின்றார். இதிலிருந்து ஆகமங்களுள் பலவகை இருந்தன என்பதை அறியலாம்.

திருஞானசம்பந்தர் இறைவனின் திருவுருவங்கள், வழிபாட்டுமுறை ஆகியவைபற்றிக் கூறும் செய்திகளில் ஆகமங்களின் வழிமுறை மரபு பின்பற்றப்படுகின்றது எனலாம். ஏனெனில் வேதங்களிலும் பழந்தமிழ் நூல்களிலும் இவை பற்றிய செய்திகள் இல்லை. வேதம் வேள்வியை வழிபாடாகக் கொண்டது ஆனால் ஆகமமே திருவுருவத்திற்கு

அபிடேக, அலங்கார, அர்ச்சனைகள் செய்து, உபசாரங்கள் செய்து, உணவு படைத்து, தூல தீபம் காட்டி வணங்குவதை வழிபாடகக்கொண்டது. திருமுறைகள் அனைத்தும் இவ்வகையான வழிபாட்டிற்கே சிறப்பிடம் அளித்துக் கூறுகின்றன.

வேதத்திலிருந்து வேள்வியை ஆகமம் மேற்கொண்டு, சிவ வேள்வியாக்கி நடைமுறைப் படுத்தியது. இவ்வேள்வியில் மிருகபலி இல்லை. பல ஆகமங்கள் பெயரளவிலேயே உள்ளன. அவை மூலத்திலேனும் கிடைக்கின்றனவா என்பது ஐயப்பாட்டிற்குரியது. வடமொழி மூலங்கள் கிடைப்பனவற்றிற்கும் தமிழ், அல்லது ஆங்கில மொழி பெயர்ப்பு இல்லை. சிவஞானபோதம் கௌரவ ஆகமத்தின் ஒரு பகுதியாகிய சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பு என்று சிவஞான முனிவர் எழுதியுள்ளார். ஆயினும் அதனைத் தமிழில் தோன்றிய முதல் நூல் என்றே அறிஞர்கள் கொள்வர்.

வேதாந்த சூத்திரங்களுக்கு முதலில் பேருரை எழுதிய நீலகண்டர் ஆகமங்களை மிகுதியாக மேற்கோள் காட்டியுள்ளார் என்பர். அந்த உரையும் வடமொழியில் உள்ளது. சிவஞான முனிவர் சில ஆகமச் செய்திகளைத் தம் வாதங்கட்குப் பயன்படுத்துகின்றார். அவர், நூல்கள் பொது, சிறப்பு என இருவகை என்பதை விளக்கும்போது, ''பவுட்கரம், மிருகேந்திரம், மதங்கம் முதலிய சிவாகமங்கள் பெத்தத்தின் நின்ற நிலை பற்றி இலக்கணம் கூறுதலின் அவை பொதுவெனவும், சர்வஞ்ஞானோத்தரம் முதலிய சிவாகமங்கள் முத்தியின் நின்ற நிலை பற்றி இலக்கணம் கூறுதலின் அவை உண்மை. (சிறப்பு) எனவும் கூறப்படுமாதலின், பவுட்கரம் முதலிய மிருகம், அவி சொரிதல் என்பனவெல்லாம் சடங்கு அளவிலேயே கொள்ளப்பட்டது. ஓமத்தீயில் நெய்யே வார்க்கப்பட்டது. திருஞானசம்பந்தர் தில்லைச் சிற்றம்பலத்தில் தில்லை வாழ் அந்தணர் செய்யும் சிவ வேள்வியைக் குறிப்பிடுகின்றார்.

''பறப்பைப் படுத்து எங்கும் பசுவேட்டு எரி ஓம்பும்
சிறப்பர் வாழ் தில்லைச்சிற்றம்பல மேய
பிறப்பில் பெருமானை'' [4] அ.

என்பன அவர் பாடல் அடிகள். பறப்பு, வேள்விச்சாலை பசுவேட்டல் என்பது சடங்கே செயல் அன்று. அது குறிக்கும் தத்துவம் ஆன்ம போதத்தைத் தியாகம் செய்தல் ஆகும். வேள்வியின் ஓமத்தீ சிவாக்கினி என்று கொள்ளப்படும்.

இதிலிருந்து, வேதத்தில் சொல்லப்பட்ட வேள்வியை ஆகமம், அத்யாத்மிகப் பொருளில் உணர்ந்து அதன் பல செயல்களைச் சடங்களவில் ஏற்று, மேற்கொண்டுள்ளது என்று அறியலாம். வேத வேள்வியை இங்ஙனம் ஆகமம் ஏற்றுக் கொண்டமையால், வைதீக கர்மம் என்ற வகையிலும் வேதம் சைவத்திற்கு அடிப்படை நூலாயிற்று.

திருஞானசம்பந்தர் வேள்வியைச் சில இடங்களில் மட்டும் குறிப்பிட்டு, ஆகம முறை வழிபாட்டை, மிகப்பல இடங்களில் குறிப்பிடுகின்றார்.

1) ''தொங்கலும் கமழ்சாந்தும் அகிற்புகையும் தொண்டர் கொண்டு
அங்கையால் தொழுதேத்த அருச்சனைக்கு அன்று அருள் செய்தான்'' [4] ஆ

2) ''பாலினால் நறுநெய்யால் பழத்தினால் பயின் றாட்டி
நூலினால் மணமாலை கொணர்ந்தடியார் புரிந் தேத்த'' [4] இ

3) ''முறையாயின பலசொல்லி ஒண்மலர் சாந்து அவை கொண்டு
முறையால் மிகும் முனிவர் தொழும் முதுகுன்று'' [4] ஈ

ஆகமத்தைக் குறிப்பிடுவதற்கு ஞானசம்பந்தர் நம் இந்திய நாட்டில் பரவலாக வழக்கில் உள்ள தந்திரம் என்னும் சொல்லையும் ஆள்கின்றமை கருதத்தக்கது.

1) ''மந்திரத்தான் தந்திரத்தான்''

2) தந்திரமாவது நீறு

சொல்லளவில் மட்டும் அன்றித் தாந்திரீக முறைகளுக்கும் ஆகமங்களுக்கும் ஒற்றுமைகள் உள்ளன. இக்காரணம் பற்றியே ஆதி சங்கரர் ஆகமங்களை ஒதுக்கினார் என்பர்.

சைவ நெறிக்கு இருப்பதைப் போல, வைணவம், சாத்தம் ஆகிய சமயங்களுக்கும் ஆகமங்கள் உண்டு. வைணவ ஆகமங்கள் பாஞ்சராத்திரம், வைகானசம் என இரு வகைப்படும். சாக்த ஆகமங்கள்[77].

ஆகமக் கல்வி வளர்ந்தால், சைவ நெறி பற்றிய இன்னும் பல உண்மைகளை அறியலாம்.

திருஞானசம்பந்தர் வேத நெறி, ஆகம நெறி ஆகியவற்றை ''வைதிகமும் மாதவமும் படைத்தவன்''[5] என்று குறிப்பிடுகின்றார். ஆகமத்தில் கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்குமே தவம் எனச் சைவ நெறியில் கொள்ளப்பட்டன.[6] இல்லறத்தில் இருந்தவாறே இவற்றை மேற்கொள்ளலாம். இவையல்லாமல் தவ ஒழுக்கம் அல்லது துறவு ஒழுக்கம் சைவத்தில் தனியாக இல்லை.

சம்பந்தர் தம்மை மூவாண்டு பருவத்தில் இறைவன் ஆட்கொண்டமைக்குக் காரணம், தாம் முற் பிறவியில் மலரால் அவனை அர்ச்சித்து வழிபட்டதே ஆகும். என, அது ஒரு தவம் போலவும், தாம் இப்போது பெற்றது தவப் பயன் போலவும் கூறுகின்றார்.

சிவபிரானின் திருவுருவக் காட்சியைச் சம்பந்தர் பல இடங்களில் வருணிக்கின்றார். பதிகந்தோறும் இது ஒரு கூறுபாடாக உள்ளது. அவ்வருணனைக்கு ஆகமங்களில் இது பற்றி வரும் செய்திகள் மட்டும் அடிப்படை என்று கொள்வதற்கு இல்லை. அவர் ஓர் அருளியலாளர். அருளியற் காட்சி பெற்றவர். அவரது வாழ்க்கையே அம்மையப்பன்

அருட் காட்சி பெற்றது முதல் தொடங்கிற்று. ஆதலின் தமது காட்சியில் கண்ட இறைவனின் கோலங்களையும் வருணிக்கின்றார் என்று கொள்ள வேண்டும்.

''தோடுடைய செவியன் விடையேறியோர்
தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப் பொடி பூசி என்
உள்ளம் கவர் கள்வன்''

என்று தொடங்கும் பதிகத்தில் வரும் வருணனை, வாளா வருணனையாக மட்டும் இன்றிப் பல புராண வரலாறுகள் பொதியப் பெற்று விளங்குகின்றது. சுடலைப் பொடி பூசுதல், சிவபிரான் மகா சங்கார காலத்தில் அனைத்தையும் அழித்து விளங்கும் மகா சங்கார ருத்திர மூர்த்தியாக விளங்குதலைக் குறிக்கும் அடையாளம் ஆகும். அது பிரமாதி தேவர்கள் எரிந்த சாம்பலாகும்.

இப்பதிகத்தில் சம்பந்தர் அர்த்த நாரீசன், சந்திர சேகரன், பிட்சாடனன், கங்காதரன், திரிபுராந்தகன் ஆகிய சிவபிரானின் மூர்த்தங்களையும், பிற பதிகங்களில் கஜ சம்ஹாரர், தாண்டவமூர்த்தி, எண்டோள் ஈசன், சிவகண நாதர், கால சம்ஹாரர், சடாதரர், ஏகபாத திரிமூர்த்தி, தட்சிணாமூர்த்தி முதலிய மூர்த்தங்களைக் குறிப்பிடு கின்றார்.

வேள்வி செய்யும் அந்தணர் மிகுதியாக வாழும் சீகாழி யில் அவர்கள் வழிபாடு செய்ய அவன் வீற்றிருக்கின்றான் என்று அவர் பாடுதல் ஆகம முறை வழிபாடு, சைவ நெறியில் பெற்றிருந்த உயிர் நாடியான இடத்தைச் சுட்டிக் காட்டு கின்றது. திருக்கோயில் வழிபாடு ஆகம முறை வழிபாடே என்பதை உறுதி செய்கின்றது.[7]

ஞானசம்பந்தர் சிறந்த கவிஞர் ஆதலின் சிவபிரானது திருமேனி வருணனை செய்யும் பொழுது, அவன் கோலத் தில் ஒவ்வாமை இருப்பதைச் சுட்டிக் காட்டி அழகுறப்பாடு கின்றார். அவன் மூன்று கண்ணும் கையில் வெண் மழுவும்

வீணையும் கொண்டு, உடலெங்கும் பாம்புகளை அணியாகப் பூண்டு வீற்றிருப்பதைப் பாடி, அதில் பாம்பும் வீணையும் தம்முள் ஒவ்வாதன என்பதைக் குறிப்பால் புலப்படுத்து கின்றார்.

1) ''தையலோர் பாகம் மகிழ்வர், நஞ்சுண்பர்
தலை யோட்டில்
ஐயமும் கொள்வர் ஆர் இவர் செய்கை அறிவாரே''[8]

2) ''நல்ல போகத்தன் யோகத்தையே புரிந்தானே''[9]

என்பனவும் ஒவ்வாமைக் குறிக்கின்றன.

பலவகை அடியார்களும் திருக்கோயிலில் அருச்சனை செய்தலைச்

''செந்தமிழர் தெய்வ மறை நாவர் செழு
நற்கலைகள் தெரிந்த அவரோடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள்
செய்ய அமர்கின்ற அரனூர்''[10]

என்று பாடுகின்றார். இதில் அவர் குறித்த கலை என்பது படிமக் கலையாக இருக்கலாம் என்று ஊகிக்கலாம். படிமக் கலை பலவகை இறையவர் தோற்றங்களை விக்கிர கங்களாக வடித்தது. அந்தத் தோற்றங்களுக்கு ஏற்ப மந்திரங்கள் அமைந்தன. மந்திர மாலைகளும் உருவாயின. பலவகை அர்ச்சனைகள் இருந்தமையையும் இவ்வடிகள் காட்டுகின்றன. ஒரு கால் தமிழிலும் அர்ச்சனை இருந்திருக்க லாம். தமிழில் போற்றிப் பாடும் வழக்கம் இருந்தமையால் தான் சம்பந்தர் பதிகம் பாடியளித்தார்.

இதுவரை கூறியவற்றால் திருஞானசம்பந்தர் எடுத்துக் கூறும் சைவ சமய வழிபாட்டில் ஆகமங்களின் அடிப்படை எவ்வாறு அமைந்துள்ளது எனக் கண்டோம். ஆகமங்கள் பலவும் நமக்குக் கிடைக்காமையால், அவற்றை ஆராய்ந்து, அவற்றின் அடிப்படை சைவத் திருமுறைகளில் எங்ஙனம் உள்ளது என்பதைச் சரிவரக் கண்டுணர இயலவில்லை,

மேற்போந்த இரண்டு இயல்களாலும் நாம் அறிவது ஒன்று உண்டு. அது, மறைகள் ஆகமங்கள் போலத் திருமுறைகளும் ஒரு தலைமையான வகையாக நின்று சைவ நெறிக்கு அடிப்படையாக உள்ளன என்பதே ஆகும்.

## அடிக்குறிப்புகள்

1. Lectures on Saiva Siddhanta, Lecture No. 3, by T. S. Kandasamy Mudaliar, Annamalai Univer sity, 1965. Page : 6.

2. அருணந்தி சிவாச்சாரியார், சிவஞானசித்தியார், பக்கம்; பாடல் எண் 267.

3. Outlines of Indian Philosophy, P. T. Srinivasa Iyengar, Part IV P. P. 130-131

4. Sources of saiva siddhanta Philosophy, Collected Papers on Saiva Siddhanta, Lecture No.3. P. 5. Annamalai university, 1965

4 அ. 1 : 80 : 2

4. ஆ. 1: 61 : 4

4. இ. 1 : 61 : 5

4. ஈ. 1 : 12 : 5

6. சிவஞானபோதம், 8 ஆம் சூத்திரம், பேருரை, கழகப்பதிப்பு, 1968. பக்கம் 397

7. 1 : 47 : 9

8. 1 : 98 : 6

9. 3 : 125 : 7

10. 3 : 80 : 4

8

# மறைத் தமிழ்

சமயத் துறையில் வேதம் உடையது என்னும் தகுதியைத் தமிழ் திருஞானசம்பந்தர், அவர்தம் பதிக இலக்கியத்தின் வாயிலாகப் பெற்றது. சேக்கிழார் திருஞான சம்பந்தரை, ''எழுதுமறை மல்லல் நெடுந்தமிழால் இம்மாநிலத் தோர்க்கு உரை சிறப்பப்'' பாடியவர் எனப் போற்றுவார்.[1] திருஞானசம்பந்தரே தமது பதிகத்தை ''மறையிலங்கு தமிழ்'' என்றும், ''மறைவளரும் தமிழ்'' என்றும் கூறுவார். திருக்குறளைத் தமிழ் வேதம் என மொழிவர். திருவள்ளுவ மாலையில் வெள்ளி வீதியார், ''செய்யா மொழிக்கும் திரு வள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே'' என்று போற்றுகின்றார்.

திருக்குறள் அறம், பொருள், இன்பத் துறை களில் தமிழ் வேதம் என்றும் சிறப்புடன் விளங்கு கின்றது. திருஞானசம்பந்தரின் இலக்கியம் சமயத் துறையில் வேதம் என்னும் தகுதி படைத்து விளங்குகின்றது. வைணவத் தமிழ் இலக்கியமான நாலாயிரத் திவ்வியப் பிர பந்தம் திருஞான சம்பந்தர் காலத்திற்குப் பின்னர் வந்த அருளாளர்களால் பாடப் பெற்றுத் திராவிட வேதம் என்று போற்றப்படும் தகுதியைப் பெற்றது.

தொல்காப்பியர் கூறும் மந்திரம் என்றும் இலக்கியவகை யைச் சார்ந்ததாக ஞானசம்பந்தரின் பதிகங்களைக் கருத லாம். அவர் கூறிய மந்திர இலக்கியத்திற்கு அடிவரையறை இல்லை. பதிகங்கள் பாவினத்தில் அமைந்த இலக்கியம் ஆகும். ஆயின் மந்திரத்திற்குத் தொல்காப்பியர் கூறும் தன்மை அல்லது பண்பு பதிகங்களில் அமைந்துள்ளது.

''நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறை மொழி தானே மந்திரம் என்ப''

என்பது தொல்காப்பிய நூற்பா. திருக்குறளில் வரும் நிறைமொழி என்பதற்குப் பரிமேலழகர், ''அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தே விடும் மொழி'' என்று பொருள் விரிப்பார். அத்தகைய நிறை மொழியை உடைய அருளாளராகத் திருஞானசம்பந்தர் விளங்கினார். அவர் தம்முடைய பதிகங்களுள் ஒவ்வொன் றையும், அது இன்ன பயன் தரும் என ஆணையோடு உறுதி கூறியே மக்களுக்கு அளித்தலினால், அவை மறைமொழி ஆகும்; மந்திரமும் ஆகும்.

தேவாரத் திருமுறை ஆசிரியர்கள் பாடிய திருக்கோயில் கள் பெரும்பாலும் பூங்கோயில்களும் செங்கற்கோயில்களுமே யாகும். ஆனால் தேவரா காலத்திற்குப் பின்னர், அவை அனைத்தையும் பல்லவ மன்னரும் சோழ மன்னரும் கற் கோயில் திருப்பணி செய்து நிலைபெற வைத்தனர், திருக் கோயில் வழிபாட்டை வலியுறுத்திய இத்திருமுறைப் பதிகங் கள் மறை மொழியாக அமைந்தமையால், கோயில்கள் கற் கோயிலாக நிலை பெற்று நிற்க, வழிபாடும் நிலை பெற்று, இடையராது நடை பெற்று வருகின்றது.

சைவநெறி திருமுறைகளால் புத்துயிர் பெற்றுத் தழைத்தது. திருமுறைகள் தந்த கருத்து விளக்கத்தின் துணையால் சைவ சித்தாந்த சாத்திரங்களும் பண்டார சாத் திரங்களும் எழுந்தன. பட்டினத்தார், அருணகிரியார், குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராமலிங்கர் முதலிய பல அருளாளர்கள் திரு முறைகளின் செல்வாக்

கினால், அவற்றின் காலம் முதல் இடையறாது வளர்ந்து வந்த சைவ இலக்கிய மரபைப் புதுப்புது வழிகளில் மலர்ச்சி பெறச் செய்து வளர்த்தனர். சைவப் பிரபந்தங்கள் பாடிய பலப்பல இலக்கியப் படைப்பாளர்களுக்குத் திருமுறைகள் ஊற்றுக் கண்ணாக விளங்கின. அவற்றுள் மூவர் தேவாரத் திற்கும் திருவாசகத்திற்கும் சிறப்பிடம் உண்டு.

திருஞானசம்பந்தரின் தேவாரம் மேலே கூறிய பயன் களை எல்லாம் விளைவித்ததுடன் அல்லாமல், பாடப்பெற்ற காலத்திலேயே மந்திர ஆற்றல் உடையதாக விளங்கிற்று. மதுரையில் அவர் திருத்தொண்டர் கூட்டத்துடன் தங்கிய திருமடத்திற்குச் சமணர் ஏவலால் தீவைக்கப்பட்டதும்ஞான சம்பந்தர், 'அந்தத் தீயைச்பையச் சென்று பாண்டியனைப் பற்றுக' என ஆணையிடும் பதிகம் பாடினார்.[2] ''வெப்பம் தென்னவன் மேல் உற, மேதினிக்கு ஒப்ப ஞானசம்பந்தன் உரைத்த பத்தும்'' என்று இன்ன பயன் உண்டாவதற்கு இப்பதிகம் உரைக்கப்படுகிறது எனத் திருக்கடைக்காப்பும் சாத்தினார். அதன் படியே பாண்டியனை வெப்பு நோய் பற்றியது.

அவ்வெப்பு நோய் நீங்குதற்குச் சம்பந்தர் திருநீற்றைப் போற்றிப் பாடிய திருநீற்றுப்பதிகம்[3] அந்தப்பயனைத் தந்தது. அதன் கடைக்காப்பில், ''தென்னன் உடல் உற்ற தீப்பிணியாயின தீரச்சாற்றிய பாடல்கள் பத்தும்'' என்று பயனைத் தெளிவாக அமைத்தார்.

சமணரோடு புனல் வாதம் செய்தற்குப்பாடிய திருப் பாசுரப் பதிகத்தை ஏட்டில் எழுதி, அதன் பதினொராம் பாடல்,

''அற்றன்றி அந்தன் மதுரைத்தொகை ஆக்கினானும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கு ஓலை
தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கு எதிர்வின் ஊரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானும்
அன்றே''[4]

என்று, ''அப்பதிகம் எழுதிய ஓலை வையையாற்றில் எதிர் ஏறிச் சென்றது'' என்றே தெளிவு பற்றிக் கால வழுவமைதியாகப் பாடி, வையையில் இட்டார். அவ்வாறே அது நீரோட்டத்தை எதிர்த்துச் சென்றது.

திருக்கொள்ளம் புதூரில் ஆற்றில் வெள்ளம் பெருகிய போது, அதைக்கடந்து ஓடத்திலும் செல்ல இயலாத நிலை தோன்றியது. ஞானசம்பந்தர் தொண்டர்களுடன் ஓடத்தில் ஏறி, அதனை மறுகரையை, நோக்கிச் செலுத்துமாறு இறைவனை, வேண்டிப் பதிகம் பாடினார். அதன் பாடல் தோறும் 'இறைவனை நான் தியானம் செய்கின்றேன். அவன் இவ்வோடத்தைக் கரை நோக்கிச் செல்லுமாறு அருள்புரிய வேண்டும்' எனப் பொருள் அமைத்தார். அவ்வாறே ஓடம் கொள்ளம்புதுரை அடைந்தது.

இவ்வாறு ஞானசம்பந்தர் பதிகங்களில் கூறிய ஆணையும் வேண்டுகோளும் நிறைவேறும் வண்ணம்,அப்பதிகத்தின் தமிழ் ஆற்றல் உடையதாக இருந்தது. இவ்வாற்றல், மொழிக்கு வந்தது எவ்வாறு?

தொல்காப்பியர்தமிழுக்கு இவ்வாற்றல்உண்டு என்பதை மந்திர இலக்கியம் என்ற இலக்கிய வகைக்கு இலக்கணம் கூறுவதனாலேயே குறிப்பிட்டார். திருஞானசம்பந்தரது வாழ்வை நோக்கும் பொழுது, இறைவனது அருளாற்றலே சம்பந்தரது தமிழாற்றலுக்குக் காரணம்எனலாம் சம்பந்தரது வரலாறு மற்றும் பல அற்புதங்களைக் கொண்டிருக்கிறது. இறைவனது அருளால் அவர் சித்தி பெற்று, அருள் வாழ்வு நடத்தி வந்தமையால் அவர் கூறிய ஆணைகளும் இறைவனிடம் வேண்டிய வேண்டுகோள்களும் (பிரார்த் தனை) கூறியவுடனே நிறைவேறின. அவற்றுள் குறிப்பிடத் தக்கவை மயிலையில் பாம்பு தீண்டி இறந்த பூம்பாவையின் என்புகளை மீண்டும் உயிர் ஏற்றிப் பூம்பாவையை உயிர்ப் பித்தமையும், விடத்தால் உயிர் நீத்த இளைஞன் ஒருவனைத்

திருமருகலில் மீண்டும் உயிர் பெறச் செய்தமையும், தாம் வீடுபேறு அடையும் பொழுது, தமது திருமணவிழாவில் கூடியிருந்தோர் அனைவரும் வீடுபேறு எய்தும் வண்ணம் செய்தமையும் ஆகும்.

இத்துணை அற்புதங்களையும் இன்று பொதுவாக மக்கள் நம்பாமல் இருக்கலாம். ஆனால், அருளாற்றல் என்ற ஒன்று மாந்தரால் எய்தும் நிலையில் உள்ளது. அதனால் எல்லாம் செயல் கூடும் என்பதை திருஞானசம்பந்தரின் வாழ்வு மெய்ப்படுத்துகின்றது.

## அடிக் குறிப்புகள்

1. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்தர், பாடல்:75
2. 3 : 51
3. 2 : 66
4. 3 : 54 : 11

# 9

## முடிவுரை

இந்நூலில் மேற்கொண்ட ஆய்வு, திருஞானசம்பந்தரின் இலக்கியப் பணி, கற்றோர் அவையில் கற்று இன்புறும் அளவில் அமைதல் வேண்டும் என்னும் நோக்கத்துடன் அல்லாமல், மக்களிடையே பண்பாட்டு மாற்றத்தையும், மரபு மறுமலர்ச்சியையும் தோற்றுவிக்க வேண்டும். என்ற! தமிழ் இயக்கத்திற்குரிய செயல்முறையாக அவரால் மேற்கொள்ளப் பட்டது என்பதை நிறுவுவதற்கே ஆகும்.

அவர் நடத்தியது சமய இயக்கம் மட்டும் அன்று; தமிழ் இயக்கம். அவர் சமய தத்துவங்களைப் பரப்பினார் என்பதைவிடத் தமிழ் மக்கள் வாழ்க்கை மரபுகளையும், பண்பாட்டையும், மொழியையும் புறநெறிகளால் சிதைந்து, உருமாறாத வண்ணம் பாதுகாத்தார் என்று கருதுவதே, பொருத்தமாகும்.

சைவ நெறிக்கு மறைகள் ஒருபுறமும் ஆகமம் ஒருபுறமும் உரமூட்டின எனினும் அந்நெறி தமிழ் மக்களுடையது. மறை அடிப்படை, ஆகம அடிப்படைகளுடன் திருமுறைகளின் அடிப்படையும் பழந்தமிழ் மரபின் அடிப்படையை ஒட்டி வளர்ந்த ஒன்றாக அமைந்து, சைவநெறியையும் சைவ சாத்திரக் கோட்பாடுகளையும் உருவாக்கி வளர்க்கக் காரணமாக இருந்தது.

திருமுறைகளுள் முதல் மூன்றைப் பாடிய திருஞான சம்பந்தர் ஒரு சமய வாதிபோலவோ, தத்துவ விசாரகர் போலவே அல்லாமல், சிறந்த கவிஞராக வாழ்ந்து வாழ்க்கை இயற்கை, இறைவன், அருள் என்னும் துறைகளில் ஆழ்ந்தும் விரிந்தும் உள்ள தம்முடைய அனுபவங்களைப் பதிக இலக்கியத்தில் பாடியுள்ளார். அவற்றை இசைக்குப் பொருந்துமாறு பாடி இசைத் தமிழை வளர்த்துள்ளார்.

---

மறைகள், உபநிடதங்கள், புராணங்கள் ஆகியவற்றுடன் திருஞானசம்பந்தரின் தேவாரமும் பிற திருமுறைகளும் கொண்டுள்ள தொடர்பு விரிவாக ஆராயப்படவேண்டும். அதைப்போல, ஆகமங்களோடு திருமுறைகள் கொண்ட தொடர்பும் விரிவாக ஆராயப்படவேண்டும். அப்பொழுது தான் தமிழ் மரபு, வேத மரபு, ஆகம மரபு என்னும் மூன்று சைவநெறியின் தோற்றம், வளர்ச்சிக்கு எவ்வாறு உதவின எனத்துணிதற்கு இயலும்.

○ ○ ○

